உ

திருச்சிற்றம்பலம்.

# காசிகாண்டமூலம்.

## அதிவீரராமபாண்டியன்

அருளிச்செய்தது.

இஃது,

பெங்களூர்

**ஆ-நமச்சிவாயமுதலியார்**

கேட்டுக்கொண்டபடி

பாரிப்பாக்கம்

**முனியப்பமுதலியாரவர்களால்**

சில ஏட்டுப்பிரதிகளைக்கொண்டு ஆராய்ச்சிசெய்வித்து

பெங்களூர் ஆப்காரி இஜாரதார்

ஆ-தொப்பைமுதலியாரவர்கள் குமாரர்

**இராமசாமிமுதலியாரவர்களாலும்**

வேலூர் - சவுளிதலால்

ஆ-பாலகிருஷ்ணமுதலியாரவர்கள்குமாரர்

**ஏகாம்பரமுதலியாரவர்களாலும்**

புரசபாக்கம்

**ஏழுமலைப்பிள்ளையினது**

விவேகவிளக்கவச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

சாலிவாகனசகம்- [illegible] ஆவணிமீ.







கடவுள் துணை.



# காசிகாண்டம்.

## மூலம்.



### பாயிரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கணபதிகாப்பு.

மாற்றரிய தொல்பிறவி மறிகடலினிடைப்பட்டுப் ... ...*
போற்றுறுதங் குரை கழற்றாட்புணைபற்றிக் கிடந்தோரைச் *·
சாற்றரிய தனிமுத்தித் தடங்கரையின் மிசையுய்ப்பக் ...*
காற்றெறியுந் தழைசெவியகடாக்களிற்றை வணங்குவாம்...*

பரமசிவன் துதி.

சீர்பூத்தசெழுந்தரங்கத்தீம்புனல்மந்தாகினிதன்பேரூர்கொன்றைத், தார்பூத்த செஞ்சடையி லணிந்தமகன் மேல்விழைவு தணியாறுஇக், கார்பூத்த விருவிசும்பிற் கங்கைநதிசூழ்கிடந்த காசிவாழும், ஏர்பூத்ததனிமுதலி னிணையடிப்பூங்கமலமல ரேத்துவாமே.(க)

உமையவள் துதி.

அலகிலாக்கருணையென்னு மருந்தளிரீன்று தொல்லை, யுலகெலாம் பூத்துக்கங்கை யுவட்டெடுத் தொழுகுஞ்சென்னி, மலையினிற்படர்ந்தபச்சை மரகதக்கொடியை ஞானக், கலையமுதொழுகு தீஞ்சொற் கனியினைக்கருத்துள்வைப்பாம்...... ...................... (உ)

### விநாயகர் துதி.

கனைபொருகங்கையாற்றிற் காளிந்திமடுப்பதென்னச், சொரிமத
க்கலுழிவெள்ளஞ்சுழித்துவார்ந்தொழுகக்காசித், திருநகரினிதுவை
குந் திங்களங்குழவிக்கோட்டு, வரைபுரைகளிநல்யானை மலரடிவண
ங்குவாமே.................................................... (௩)

### முருகர் துதி.

இலைமுகப்பைம்பூண்டாங்கி யேர்குடியிருந்த கொம்மை, முலை
முகிழ்பூத்தவள்ளி முயங்குதோள் வெற்பினானை, மலைமுகம்புழுங்க
மாட்டி, மாமுதறடிந்துவெய்ய, கொலைபழுத்தொழுகும் வைவேற்
குழகனைவணங்கல்செய்வாம்..... ..................................(௪)

### திருஞானசம்பந்தர் துதி.

கேழ்கிளர்புனிற்றுத்திங்கள் கிடந்தொளிர்சடையோன்பங்கி, ரு
ழிருங்கூந்தற்பேதை தடமுலைத்தீம்பான்மாந்தி, யேழ்நிலவரைப்பு
முய்ய வீர்ந்தமிழ்மாரிபெய்த, காழிமாமுகிலின்செய்ய மலரடிக
ருத்துள்வைப்பாம்.......................................... .............(௫)

### சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

கதமெரிநேமிதூண்டிக் கராங்கவர்குரவனீன்ற, மதலையையழை
த்தசெங்கண் மாலெனவருந்துறும, லதிர்கடலமிர்தமென்ன வரு
ந்தமிழ்ப்பதிகம்பாடி, முதலைவாய்ப்பிள்ளைதந்த முதல்வனைவழுத்
தல்செய்வாம்.......................................... ....................(௬)

### திருநாவுக்கரசுசுவாமிகள் துதி.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கருவாழிக்கரைகாணாச்சாக்கியர்கள்கற்றூணிற்சிக்கயாத்துப், பெ
ருவாழியிடைவீழ்ப்ப வதுபுணையாக் கரையேறிப் பெட்பினுள்ள,
முருகாமெய்ம் மயிர்பொடிப்ப வோங்கெயின்மூன் றெரித்தோ
னையுவந்துபாடுந், திருநாவுக்கரசனிரு சேவடிப்பூங்கமலமலர் செ
ன்னிசேர்ப்பாம்.................................................... (௭)

### திருவாதவூரர் துதி.

கொழுதியினவரியளிகள் கூட்டுண்ணுங்கொன்றையந்தார்க் குழ
கன்றனிற், பழுதறுசொற்பாமாலை புனைந்தேத்தி யெறிதிரைநீர்ப்ப
ரவையாடை, முழுதுலகமதிக்கவிகை தனிநிழற்றி யொருசெங்கோ

ன்முறைநடாத்தும், வழுதிமுனம் பரியழைத்த வாதவூரிறைவனடி
வழுத்தல்செய்வாம்.......................................(௮)

குருமூர்த்திதுதி.

திருக்கிளர்வெள்ளபிறைக்கொழுந்துஞ் செஞ்சடையுமறிமானுந்
திண்டோளெட்டு, முருக்கிளர்வெம் புலியதளுங் கரந்துமானிடவ
டிவினுலகிற்போந்து, மருட்கிடனாமெனைப்பிணித்த வல்வினையின்
றொடரனைத்து மாயநூறி, யருட்கடைக்கணளித்தாண்டசுவாமிதே
வன்றிருத்தாளகத்துள்வைப்பாம்..............................(௯)

அறுபத்துமூவர்துதி.

முறுவற்றண்கதிர்மதியுமுரிபுருவக்குனிசிலையுமூசிவண்டு, கரிகற்
குழலர்க்குழலுங்குழைதடவுங் கருந்தடங்கட் கயலுந்தாங்கு, மறு
வற்றமதிமுகத்து மானிடத்தர் மழுவலத்தர் மலர்த்தாள் சேர்ந்த,
வறுபத்துமூவர்மலரடியிணைக ளெமதுசிரத்தணிதல்செய்வாம்(௰)

சிவனடியார்கடுதி.

அவிராழிச்சுடர்ப்படைகொண் டுலகளிக்குநெடுமாலு மயனுங்
காணாத், துவர்வாய்மெல்லியல்பாகன் றிருவருள்பூண் டிரங்குதிரை
சுருட்டுதெண்ணீ, ருவராழிசூழ்கிடந்த விருநிலத்திற்பாதலத்தி லும்
பர்நாட்டில்,சிவவேடந்தரித்தவர்மற் றெவருளரங் கவர்மலர்த்தாள்
சென்னிசேர்ப்பாம்.......................................(௰௧)

அறந்தவாதொழுகும் வைதிகசைவ நெறியினிலகனில மருங்கிற்,
பிறந்துளோர் பிறவா நின்றுளோர் பிறப்போர் பெய்கழற் றும்
பைப்போதின், மறந்திடாதன்பு பூண்டுளோரியாவ ராயினுமுவந்து
மற்றவர்தஞ், சிறந்தபூங்கமல மருட்டிவீடளிக்குஞ் சேவடிசென்
னியிற்சேர்ப்பாம்.......................................(௰௨)

வாழ்த்து.

அருமறை முனிவர்வாழ்க வானினம் வாழ்கத்தெண்ணீர், விரிதி
ரையுலகங்காக்கும் விறல்கெழு வேந்தன்வாழ்க, மருவிய திங்கடோ
று மழைவளஞ் சுரக்கவெங்கோன், பொருளுறமொழிந்ததொன்னூ
ல் பொற்பொடும்பொலிகமாதோ.......................................(௰௩)

நூல்வரலாறு.

புவிபுகழுங் காசிகாண்டம் பொருவில்பராசன்புதல்வன் புகன்
றவாறே, செவிவழியினமுதுகுத்த செவ்வைமதுரம் பொழிதமிழாற்

றெரிந்தல்செய்தா, னுவவுமதிக்குடைநிழற்ற வோராழித்திசையுருட்டி யொலிநீர்வேலி, யவனிபுரந்தருள்வழுதி யதிவீரராமனிக லரசரேறே.......................................................... (௧௪)

### நூலாசிரியர்சிறப்பு.

நீற்றொளிபழுத்தநெற்றியன்றொல்னூ னிகழ்த்தியவறநெறியமிழ்ந்து, மூற்றிருந்தொழுகு நாவினனெண்டோளொருவனை யெண்ணியவுளத்தன், மாற்றருஞ்சிறப்பிற் கண்டிகையாலை மருளறவிளக்கியமெய்ய, னாற்றருந்தவத்துச்சூதமாமுனிவ னைமிசாரண்ணியத்தினடைந்தான்.......................................................... (௧௫)

சூதமாமுனிவன் வரவெதிர்நோக்கித் துகளறமுக்குறும் பெறிந்து, மாதவக்கிழமை பூண்டுளோர்யாரும் வருகெனமுகமனன்கியம்பித், தீதறயாங்களிழைத்தநற்றவத்தின் செய்தியாற்போந்தனை யென்ன, வாதரம்பெருகி யருக்கியமுதல யாவையுமுறையினி லளித்தார்.......................................................... (௧௬)

வழிவரல்வருத்த மாற்றியபின்னர்ச் சூதமா முனிவரன் மகிழ்வான், மொழிதருபதினெண் புராணமுமுன்னர் மொழிந்தனைகாந்தத்துள் மொழிந்த, பழுதறுகாசி காண்டநீயின்னுய் பகர்ந்திடல் வேண்டுமென்றிரப்பப், பொழிதருகருணை வியாதனைவணங்கிச் சூதமா முனிவரன் புகலும்.......................................................... (௧௭)

பாயிரம் - முற்றிற்று.

முதலாவது,

## விந்தவரையைநாரதர்கண்ட

## அத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருவளர்மகதிவீணைத் தெய்வமாமுனிவன்றென்னணீர், நருமறை யாற்றின்மூழ்கி நானிலத்துயிர்கட் கெல்லாங், கருதிய வினைத்துநல் குங் குடிலையங் கடவுட்போற்றி, வருதலும் பொருவில்விந்த மால் வரையினிற்கண்டான்.......................................................... (௧)

குழைத்துவின படருங்கோட்டுங் கொழுநனையதவம்யாவும், பழுத்தனநின்றதோற்றம் பைந்துழாய்ப்படலைத்திண்டோ, ளழற்பொறிதிகிரிமாய னெட்பருமண்டமெல்லாம், விழுத்தகுமெய்யிற்றாங்கி நின்றெனவிளங்கிற்றன்றே........(௨)

மின்றிகழ்கமஞ்சூற்கொண்டல் படிதலும்வேழமென்னச், சென்றொருவேழமேற்பச் செவிவளிவிசையிற்சிந்திக், குன்றினின்றகன்ற மேகங் கொல்சினக்களிநல்யானைப், பின்றொடர்ந்தேகவஞ்சிப் பெயர்ந்தமாலியானைபோலும்........(௩)

தளிர்முகிற்படலமந்தண் சாரலிற்றவிழவோங்கி, வெளிறுகடனைவுசென்னி மீக்கிளர்மரங்களெல்லாம், நளிர்நிலாமணிக்கற்பாறைநனைமதிதவழமல்கு, குளிர்புனற்றிவலைமாந்திக் குழைத்தனவளருமன்றே........(௪)

வண்டொடுஞெமிறுந்தேனு மலர்ப்பொதி யவிழ்த்துவார்த்த, தண்டுளிநறவமார்ந்துதண்ணறுஞ்சாரற்றாழ்ந்த, கொண்டலினனைந்த கூந்தற் குறத்தியர்குழாங்கொண்டேகி, விண்டொடுகுடுமியேறி விரித்துநீர்புலர்த்துவாரே........(௫)

தடஞ்சினைமரங்களெல்லாஞ் சந்தனவேழமெல்லாங், கடம்பொழிபுழைக்கைநால்வாய்க் கடாச்சினக்களிநல்யானை, யடைந்துலாய்விலங்கியாவு மருங்கடிநரந்தநாவி, மிடைந்துறுபறவையாவுங் கின்னரமிதுனமாதோ........(௬)

இனையனவளங்கொள்விந்த மானிடவுருவமெய்திக், கனைகதிர்ச்செல்வனென்னைக் கதிர்பரந் தெறிக்கப்போந்த, வினையறுதவத்துமிக்க வீணைமா முனியைக்காணாப், புனைகழல் வழுத்தவெண்ணிப் போயெதிர் கொண்டதன்றே........(௭)

நீந்தொடை மகதிவீணைத் தெய்வமா முனிவன்றானி, லேந்தெழிற்குடுமிக்குன்றங் குழையொடுமிறைஞ்சிற்றென்றும், பாந்தளின்மிடரிலேய படிகடனுடுத்தபாரில், வாய்ந்தநற் றவத்தின்மிக்க துளவென வருக்கலாட்டோ........(௮)

வணங்கலுந்தழீஇக் கொண்டன்பின் வரம்பிலாவாசிகூறும், பிணைந்துநாம் மார்பனுள்ளம் பெட்புறவுவகையோங்க, விணக்கியமுகமஞ்ஞுபி மருக்கிய முதலவீர்த்து, தனைந்துதான் வருடிப்போந்த வருத்தமுந் தவிர்த்ததன்றே........(௯)

மாதவவிவணீபோத மனத்திருளகன்றதப்பொற், பாதநுண்டுகளாலின்றென் பவக்கடற் றுறந்ததிற்றைத், தீதறுநாளுநன்னாளாயது சேணினோங்கு, பூதரமென்னும்பேரு மெனக்கினிப் பொலிந்ததன்றே.................................................... (௰)

என்றனுருயிர்ப்புவீங்கி நாரதனிருப்பநோக்கித், துன்றிருபுவிகளெல்லாஞ் சுமப்பவன் யானேமற்றைக், குன்றெலாஞ் சுமக்குமென்னல்கூற்றலாற் றரிக்கலாற்றாப், பொன்றிணிந் திருக்குநீரான் மேருவும் பொலிந்ததன்றே............................ (௰௧)

உயிர்தருமத்தமில்லா நிடதமு மவுணரோங்குஞ், செயிருடையுதயவெற்புஞ் செம்மையி னீலக்குன்று, மியல்புற நடத்தல்செல்லா ரோவதக்கிரியுநாகம், பயிலியற் பொதியவெற்பு மெனக்கிணை பகரலாமோ..........................................(௰௨)

கண்ணின்மந்தரமும்வெய்ய கடும்பனி நனியவோங்கு, மண்ணலங்குடுமிக்குன்று மகநிலஞ் சுமக்கலாகா, விண்ணுயர் சையமுங்கிரவுஞ்சமும் வேலைஞாலத், தெண்ணுறு கிரிகள்யாவு மெனக்கிணை யல்லமாதோ.......................................... (௰௩)

என்றிகல்விந்தங்கூற விருஞ்சடைக் கடவுள்வைகுங், குன்றமேமுதலாயுள்ள குலவரை யனைத்துநிற்க, நன்றுகொ விதனுக்குற்ற மனச்செருக் கென்றுநக்கு, மன்றலங் கமலப்புத்தேன் மகனுளத் தென்னணிச்சொல்வான்.................................. (௰௪)

உடைதிரைப் பரவைஞாலத் துயர்விசும் பகடுதோயுங், கடவுண்மால் வரைகட்கெல்லா மிறையெனக்கழறலென்னோ, வடவரைதன்னையாது மதிக்கிலா துளைத்தமாற்றந், தடவரைக் கிறைவநின்பாற் சாற்றுவான் புகுந்துளேனால்.................................(௰௫)

நின்னுழை யடைந்தபோழ்தி னெட்டுயிர்ப்பெறிந்தவாறு, மன்னது கருதியென்று வறைந்துநன் முகமன்கூறி, யின்னிசை மகதி வீணை யிருந்தவற் கிறைவன்வானோர், பொன்னகரதனைநோக்கிப் போயினன் போயபின்னர்.................................. (௰௬)

## நீதிகூறல்.

### கலிவிருத்தம்.

வீழ்புனல்வழிமனம் விடுநர்வாழ்க்கையுஞ், சூழ்வினைமுடித்திடார் துய்த்துவாழ்வதுந், தாழ்விலன்புடையதன் றமரிகழ்ந்திட, வீழுநர்வாழ்க்கையும் வாழ்க்கையாகுமோ..................... (௰௭)

இருந்தலர்புகழொடுஞ் செல்வந்துய்த்திட, வருந்தியுங்கருணை
யோ டடிசில்வாய்மடுத், தருந்தியுந்துயின்றுநல் லின்பமாற்றியு,
மிருந்துயிர்சுமப்பதி லிறத்தனன்றரோ.................. (௰அ)

புத்தியைக்கொடியவெம் பசியைப்பொற்பினை, யந்தமின்முயற்
சியைத் துயிலையாற்றலை, நந்தலிலுயிரினை நன்னர்நெஞ்சினைச், சிந்
தையொன்றெய்திடிற் சிதைக்குமென்பவே.................(௰௯)

உருத்தெழுவெப்புநோய் பழகினுய்யுமா, றருத்தியமருந்தினி
லமையுஞ் சிந்தைவெட், பெரித்துநாள்பற்பல கழியினீண்டுமால்,
வருத்துவரோவிஃ தாற்றவல்லரோ......................... (௨௰)

மெய்ம்மைநூற்றுறை படிவினைவல்லவன், பொய்மொழிபுகல்
வனென் றெண்ணல்புல்லிதே, யம்மவோமேருவு மமருக்கென்னு
மே, னம்முடையெழும்வலி நன்றுநன்றரோ.............. (௨௧)

பொலனெடுங்கிரிக்குறு புகழ்ச்சியாதவன், வலம்வருகின்றதால்
வந்ததாமிவன், செலவினைத் தடுப்பனென் றெண்ணித்தெண்டினா,
யுலகளந்தவனென விசும்பினோங்கிற்றே..................... (௨௨)

மழகதிர் கனைகடன் குடகட்டின் வந்துமே, லெழுவது செய்கட
னிறுத்தற்கெண்ணுபு, பழமறையந்தணர் பார்க்குந் தன்மைபோ,
னிழலுமிழ் மணிவரை நோக்கிநின்றதே.................... (௨௩)



விந்தவரையை நாரதர் கண்டவத்தியாய முற்றிற்று.



இரண்டாவது,

# தேவர்கள் பிரமலோகமடைந்த அத்தியாயம்.



## கலிவிருத்தம்.

அருமறையந்தணர் கடன்களாற்றிட, மருவிரிகமலமேல் வண்டு
பாண்செய, விரிகதிர்திசைதொறும் பரப்பும்விண்ணவன், முரிதி
ரைக்கருங்கடல் முகட்டிற்றோன்றினான்........................ (௧)

எழுந்தவெய்யவனழற்கிறைவன்றிக்கினைக், கிழிந்துபோய்ச் செந்தமிழ்க் கடவுண்மால்வரை, தழங்கிசையருவியிற் றவழுந்தென்றலங், கொழுந்துலாந்தென்றிசைக் குறுகன்மேயினான்... (௨)

கனைகதிர்ப்பரிதியங் கடவுள்வானவன், றுணையரிப்புரவிக ளோடச்செல்கில, வெனையரோதடுப்பவ ரென்னவெண்ணுரு, வனைகழ லருணனும் வணங்கக்கூறுவான்.......... ..... ................(௩)

என்னுடைப்பணியினா லன்றியெல்லொளி, மன்னவபொலங்கிரி வலங்கொளேலென, மின்னருமணிதிகழ் விந்தமால்வரை, தன்னுடைவலியினாற் றடுத்த தாமென்றான்.......................... (௪)

என்றலுமிருட்குறும் பெறியும்வெய்யவன், றும்பிருவிசும்பெலா மறைத்ததோற்றத்தா, னன்றுநன் றிதன்வலி யென்றுநன்மணிக், குன்றினைவியப்பொடுங் குறித்துநோக்கினான்...............(௫)

வடதிசைக் குணதிசை மருவிவாழுநர், படர்வெயி லின்றமையிற் பையுளெய்தினார், குடதிசைதென்றிசைக் குழுமிவாழுநர், மிடையிருட்பிழம்பினா லுள்ளம்வெம்பினார்...................... ... (௬)

அருமறை வேள்விகண் முதலவாகிய, கருமமென் றனைத்தவை யாவுங்காய்கதி, ரிரவியன்செல்வினை யின்றியின்மையால், விரிகட லுலகெலாந் துயரின்வீழ்ந்தவே................................ (௭)

தோற்றுவித் தளித்தவை துடைத்தல்காலங்கள், போற்றுதல்வெங்கதிர்ப் புனிதனன்றிமற், றாற்றுந ரின்மையா லுலகம் யாவையு, மாற்றருஞ்சித்திர மென்ன வைகுமால்..... .................... (௮)

ஓரிடைவெயிலிருளோரிடத்ததாய்ச், சேர்தலினுரகருந் தேவர் யாவரும், பார்மிசைமுனிவரும் பங்கயாசனன், வார்கழற்றுமனை யடைந்துவாழ்த்தினார்......... ..................................(௯)

## பிரமதோத்திரம்.

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அருவமா யுருவமாகி யாதியாயநாதியாகிப், பிரமமாயடைதற் கெட்டாப் பேரின்பவீடதாகி, யிரணியகருப்பனாகி யாருமாயெவையுமாகித், தெரியருப்பொருளாய்நின்ற நின்னடிசென்னிசேர்ப் பாம்........................................... (௰)

எழுதருமறைகட்கெய்தா தெங்குமாய்நின்றாய்போற்றி, மொழி
யுடன்மனனுக்கெட்டா முழுப்பரம்பொருளேபோற்றி, தொழுத
குமனத்தோர்நெஞ்சத் தூய்வெளியதனிற்றோன்றி,யழிவருஞ்சோ
தியாய வருமறைக்கொழுந்தேபோற்றி........................(௰௧)

விச்சையாய் விச்சையாகி விளங்குமுக் குணத்திற்றோன்றி, மூச்
செயல்புரியாநின்ற மூவராய்க்காலமேவா, இச்சையிற்புருடனாகியி
றைஞ்சுநர் பவத்தில்வீழு,மச்சம தகற்றிநின்ற வமலனே போற்றி
போற்றி...................................................... (௰௨)

ஐம்பெரும்பூதமாகி யவற்றுறுகுணங்களாகி, யைம்பொறியாகி
யந்தக்கரணமாயறிவுமாகி, யைம்பெருங் கருமமாகி யனைத்தினுந்
தோய்ந்துந் தோயா, வைம்பெருங் கடவுளாகு மாதிநின் னடிகள்
போற்றி................................................ (௰௩)

வெருவருங்காமமாதி வெஞ்சுறவெறியநீங்கா, விருவினைத்திரைக
ளொற்றும்பிறவியங்கடலுளெய்தி,மருளுறுமுயிர்களெல்லாம்வருந்
துறுதெப்பமான, வருளுருவெடுத்தவுன்ற னடியிணைக்கன்புசெ
ய்வாம்......................................................(௰௪)

உயிர்ப்பறுமறைகள்வேறிவ்வுலகெலாஞ்செய்யபொற்றாள், பயி
ர்ப்புறுநிலநின்சென்னி பரமவாகாயமாகும், வியப்புறு சுழிகளுந்
தி நடுவெளி யாகுமெய்யின், மயிர்த்தொகை யனைத்துமெண்ணில்
வான்றருக்குலங்களாமால்...................................... (௰௫)

கடவுணின்மனத்திற்றோன்றுங் கலைமதிகண்ணிற்றோன்றும், பட
ர்வெயிற்கற்றைகான்று பாயிருள் பருகும்வெய்யோன், மிடைதரு
புவனமெல்லாநின் னுழைமேயவேத்தப்,படுபுகழ்புகழ்வோன்போ
ற்றப் படுநிலநீயேயாமால்..................................(௰௬)



என்றடிதொழுதுபோற்றி யிமையவர் நிற்பவோங்கு, குன்றிரு
ஞ்சிறைகளீர்ந்த குரிசில்வாண்முகத்தைநோக்கித், துன்றிருவிசும்
பினின்று போந்தமைசொல்லுகென்ன,மன்றலங்கமலப்புத்தேண்
மனமகிழ்ந் துரைக்கலுற்றான்.................................. (௰௭)

வழுத்துமித்துதியாலென்னை முகுந்தனைமழுவலானை, முழுத்த
பேரன்புமுற்றி முறையினிற்பரவினோர்க்கும், விழுத்தகும்பொருள்

களாகி வேண்டுப வெறுப்பநல்கித், தொழத்தகு மறைகளேத்துந்
தூயவீடளித்துமன்றே............................................(௰௮)

வெருவரலொழித்துநெஞ்சின் வெந்துயர்தவிர்கநீவி, ருருமறை
முதலவாய விஞ்சைநன்மகங்களான்ற, பொருவறு வாய்மைநீதி பு
னிதமாதவங்கள்யாவு, முருவுகொண்டெம்மைநீங்கா துவட்பொடு
மினிதுவைகும்............................................(௰௯)

ஒலிமுதல்புலன்களைந்து மொடுக்கியுட் கரணஞ்செற்றோ, ரலகி
லுண்மறையுந்தெள்ளி யறநெறித்துறையுணின்றோர், பலன்விழை
யாதுநோற்போர் பத்தினிப்பெண்டிராவின், குலமினிதருந்தலை
ம்புற் கொடுப்பவர்தவத்தின்மிக்கோர்.......................... (௨௰)

பிறர்மனைவிழைதல்செல்லார் பெற்றதாய்தந்தைதாளி, னறுமல
ர்த் தூவித் தாழ்வோர் நான்மறைக் கிழவர்பாதத், துறுபுனலுகர்
வோர்கங்கைக் கரையினிலுடலநீத்தோர், மறைபுகழ் பிரயாகைதன்
னின் மாகநீர்படிந்ததூயோர்.................................. (௨௧)

ஒளிமதியயனஞ்சார்ந்தோ ருலையகோடிகையையீந்தோ, ரளியு
டனிறந்தோர்க்கெல்லாங் கலையினிலன்னமீந்தோர், தெளிவுடன்பு
னிதராகித் திங்களொன்றிடையிட்டுண்போர், களிதருகாமமாதி சழி
மலங்கழுவுநீரார்............................................(௨௨)

ஈங்கிவர்யாருமெம்பா னினிதுவீற்றிருந்தபின்னர், நீங்கருங்காசி
தன்னிற் பிறந்துவெண்ணீற்றுமேனிக், கோங்குறழ் முலையாள்பங்க
ன் குரைகழற்கமலம்போற்றி, யாங்கவனருளான்மீளாப் பேரின்ப
மடைவர்மாதோ............................................ (௨௩)

உறுபுலனடக்கிவேத நெறிவழியொழுகிநின்ற, வறுதொழிலோ
ரும்யானுங் குலமொன்றுமவருளாய்ந்து, மறுவறுமறையோர்தம்
பான் மந்திரமனைத்தும் வைத்தேன், றெறுவிடை யவிகள் யாவுந்
தோமறத்தொகுத்துவைத்தேன்............................(௨௪)

பசுவின்மகிமைகூறுதல்.

ஆன்குளம்படியிற்சேர்ந்த வருந்துகடோயப்பெற்ற, வூன்பயி
லியாக்கைகங்கை தோய்ந்ததா மருப்பினுச்சி, வான்புனற் கடவுட்
பேர்யாறிருக்கும்வானிலவுகாலுங், கூன்பிறைமுடித்தசெல்விகொ
ம்பிடைவதியுமாதோ............................................(௨௫)

கோசலந்தெய்வநன்னீர் நருமதைகோமயந்தா, ஆசறுயமுனை
தீம்பா லலைபுனற்கங்கையாகு, மாசில்வெண்டிங்கட்கண்டு யரசனு
மயனு மாலுந், தேசுடை யதனிலென்றுஞ் சேர்ந்தினி திருப்ப ர
ன்றே..................................................(௨௬)

உலகெலாமுறுப்பின் வைகுமாவினையுவந்துபோற்றி, வலம்வரி
ற்றேவை யெல்லாம்வலம்வரு பயனுண்டாகுங், குலவும்வாணுதி
யான் மெய்யிற்றைவரிற் கொடுநோய்துன்பங், கலதிபோய்நறு
மென் கூந்தற்கமலைவந் தடையுமன்றே.........................(௨௭)

குடநிகர் செருத்தநல்லான் கோதறு முனிவர்வேதங், கடவுண்
மீன் கற்புமாதர் வள்ளியோர் வாய்மைகாப்போ, ரிடைவிடாதுவ
ந்துதானம் வழங்குந ரொழுவராவார், புடவிகீழ் விழாதெஞ்ஞான்
று மெளிதினிற் பொறுக்குநீரார்......................... (௨௮)

விளங்குநம் முலகின்மேலாம் வைகுந்தமதன்மேற்கந்தன், வள
ங்கெழு முலகம்வெற்பின் மாதுல கதனின்மேலாங், களங்கனியனை
யகண்ட னுலகதன் மேலாம்பாங்க, குளங்கவர் வனப்பின்மேவுங்
கோவின துலகமாமே..................................(௨௯)

கூறுநான் மறைவல்லோருக் கானினைக் கொடுக்குமேலோ, ரீறி
ல்பே ரின்பந்துய்த்து நலாதிலா மூப்புமின்றி, யாறெலாம் பாலா
ய்ச்செய்ய வளறுபா லடிசிலாய, வீறுயர்கோலோகத்தின் மேவி
வீற் றிருப்பர்மாதோ.................................. (௩௰)

எதமின்மறைகடோரா லிருபிறப் பாளரல்லா, ராதியிற்றோன்றி
நின்ற வேதமுமங்கமாறு, மோதியபுராணநூலுங் கண்களோடுள்ள
மாகு, மேதகுமலையிலாதார் விழியொடு மனமிலாதார்... (௩௧)

விந்தமால் வரைபொற்கோட்டு மேருவோ டுகவிவெய்யோ,
னந்தரத்தியங்காவண்ணந் தடுத்தனா லமரரிங்கு, வந்தநீர் காசிதன்
னில் வான்றவம் புரியாநின்ற, செந்தமிழ் முனிவனல்லால் யாரது
தீர்க்குநீரார்.........................................(௩௨)

காசியினுறையுமுக்கட் கனியருட்கடலின்மூழ்கி, யாசறவிளங்கு
கின்ற குடமுனிக் கரியதுண்டோ, தேசுடைமுனிபானீவிர் சென்
மின்க ளென்னவோதி, வாசமென்கமலவீட்டு மறையவன் மறைந்
துபோனான்........................................(௩௩)

உடைதிரைப் பரவையேழுங் குடங்கையின்வாரியுண்ட, கடவுண்
மா முனிவன்றனைக் காண்பது நிமித்தமாகப், படவரவசைத்த
முக்கட் பரமன்வீற் றிருக்குங்காசி, யடைதுநா மென்றுநெஞ்சங்
களித்தன ரமரரெல்லாம்.............................. (கச)

காசியைக் குறித்துச்செல்லுங் கால்களே கால்களாகுங், காசியை
வழுத்துநாவே நாவெனக் கழறலாமால், காசியின் கதைகள்கேட்
குஞ் செவிகளே செவிகளாகுங், காசியையினிதுகாணுங் கண்களே
கண்களாமால்.............................................. (கரு)

எனவுள மகிழ்ச்சிபொங்க விமையவர் குழாங்கொண் டேகிக்,
கனைதிரைக் கங்கைசூழுங் காசியிலடைந்தாரொன்று, வினையறுதவத்
துச்சூதன் வேட்கையோடிருந்துநோற்ற, முனிவரன்னினிதுகேட்ப
முகமலர்ந் துரைத்தானன்றே.............................. (கசா)

இரண்டாவது, தேவர்கள் பிரமலோகமடைந்த
வத்தியாயம் - முற்றிற்று.



ஆ அத்தியாயம் - மூன்றுக்கு - திருவிருத்தம். எள.



மூன்றாவது,

# தேவர்கள் அகஸ்தியர் ஆசிரமத்தில்வந்த அத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

மாசிறவத்தின் றுறைபோய மறைதேர்முனிவர் மகிழ்கூர்ந்து,
காசியடைந்துவிண்ணவர்களிழைத்தவாறுங் கடல்பருகு, மாசின்
முனிவர்ச் சேர்ந்ததுவு மன்னோல்விந்த மடக்கியதும், பேசுகென
னச்சூதமுனி பிறழாதினிதின் மொழிந்தனனால்.............. (க)

ஆயுங்கேள்விச்சௌனகனுமறை யறையும்வைசம் பாயனெனு, நீயுங்
கேண்மின் விண்ணவர்போய் நெடுநீர்மணிக்கன்னிகையாடிக், கா
யுங்கதிரோன் குணக்கெழுந்த காலைக்கடவ கடன்கழித்துத், தூய
மறையோர் மனைகளிப்பத் துகடீர்தானத் தொழின்முடித்தார். ()

பொங்கிப்பரந்த திரைக்கங்கை புனல்சூழ்காசி நகருறையுந், திங்கட்கண்ணிமுழுமுதலின் செய்யமலர்த்தாளிணைதொழுது, கொங்கிற்பொலிந்த நறுமலர்தூய்க் கோயில்வலங்கொண் டோரைந்து, கங்குற்பொழுது கழித்துமனங் களிகொண்டுருகிக் கனிந்தனரால்.

எறிநீர்க்கங்கைசூழ்கிடந்த வின்னநகரினெஞ்ஞான்றும், பறவையினமும்விலங்குகளு மிறக்குங்காலைப்படர்சடையெம், மிறைவன் புகறாரகப்பிரம வுபதேசத்தாலீறில்கதி, பெறுபவென்னிலிங்குறைவார் பெறுபேறியாமோபேசுவதே...................... (௪)

இன்னநகரினிடைப்பிறந்த மலத்திற்புழுவுமீறெய்தின், மன்னும்பிறவிக்கடற்படிந்து வருந்தாதழியாவீடெய்து, முன்னரிழைத்த நல்வினைகண் முழுதுமலப்பில்விசும்பொழிந்து, பின்னுநிலத்தினிடைவந்து பிறப்பேநமதுபெறினிதால்.................. (௫)

மற்றநகரின்வீற்றிருந்து மதிவெண்கவிகைதனிநிழற்றுங், கொற்றவேந்தராதலினுங் குளிர்வெண்டாளமணிவரன்றி, யெற்றுதிரைநீர்க்காசிதனில் யாரேயெனுமிறத்தலினிதீ, தொற்றைநுதற்கட் பெருமாறு யுறையுந்தன்மைத்தாதலினால்........................ (௬)

முளரிப்பொகுட்டில் வீற்றிருக்கு முதல்வன்பகற்போதெட்டி லொன்றிற், குளிர்வெண்மதிச்செஞ்சுடர்ப்பரிதி குடுமிவரையின்சிறகரிந்த, மிளிருங்குலிசப்படைசுமந்த வேந்தன்முதலோரிறந்திடுவ, ரளவில்பிரமரழிந்திடினு மழியாரிந்நகருறைவோர்...... (௭)

மறிமானேந்திக்கியொருபாகன் வாழுங்காசிக்கேகுதுமென், றறியான்சொல்லுமடிக்கடியோர் புரவிமகப்பே றடைந்திடுவன், குறியாநடந்துகுளாதிரைநீர்க்கங்கையாடிக்கொன்றைபுனை, யிறையோன் பாதந்தொழுமவர்பே றெம்மாற்கூறுந்தகைமைத்தோ.........(௮)

கடவுட்கங்கைப்பேரியாறு காணிலாடிற்கடன்கழிக்கிற், றேடில் வானெறிசென்றடைந்திடுவர் சூழ்ந்துகோயில்வலம்வந்து, மடியாற்காசிமுழுமுதலை வணங்கிமுத்திமண்டபத்தோர், நொடியாயினுமுள்ளுறைந்திடுவோர் நுவலற்கரியவீடடைவார்........... (௯)

என்றுகாசிவீறனைத்து மெண்ணியெண்ணிவியப்பெய்தி, மன்றற்றருவினிழலுறை வைரப்படையோன் முதலமர, ரொன்றிநீங்கா முக்குறும்பு மெறிந்துபுலன்களைந்தும், வென்றகலச முனியுறையு மிருக்கைநோக்கிவிரைந்தெழுந்தார்...................... (௰)

விலங்கு-பறவை-நீதிகூறல்.

அழலுங்கனலும் வெய்யவனு மழற்றுவாகிமருண்மாலைக், குழவி மதிபோற் குளிர்தூங்கும் புரிகோட்டிரலை யிளங்கன்று, முலையுயி னுறைவெம்புலிப்பறழும் விளையாட்டயருமுள்ளெயிற்றுத், தழல் கட்பாம்பினகல்வாயை யனையெயிற்றெலிகடனித்துயிலும்... (யக)

அரிமானேற்றிற்கூன்பிறைக்கோட் டண்ணல்வேழமதகுறிஞ்சும், வெருவாச்சரபந்தலையணையா வெங்கணரிமான்விழிதுயிலும், புரிகோட்டிரலைபுனிற்றுமறி பொங்கியெழுந்துவால்குழைத்துப், பலிவாற்கடைவாய்ப்பாலொழுகப்பாய்வெய்புலியின்முலையுண்ணும்.

கேழற்பன்றிமருப்பினிலங் கிளையாருமலிமேற்றுயிலும், பேழ்வாய்க்கராடிடயிருளர்ந்து முதிர்குன்மந்திமேனெடுக்கு, மழுங்கணேல்பாய்ந்தொழுகுவிழி யுரகங்கீழ்மேலுறங்கு, மாழைச்சிறுமான் குழக்கன்றை வந்துநரிகடைவருமால்........................ (யந)

பொருவின்மறையினுபநிடதப் பொருள்கடேர்ந்துபூவையொடு, முருவசெந்தார்ப் பசுங்கிள்ளை யுரையாநிற்கும் பலவிலங்கும், வெருவலசெய்யாநடுசினத்த வேடர்சிலையின்முதுகுறிஞ்சுங், குருகுவாவியருகிருந்து முகளுமீனங்குத்தாவால்..... ........ .....(யச)

கவரியினங்கள்கடைகுழன்று கருமைவார்ந்தவாலதியைக், குவிமென்கொங்கைக்குறத்தியர்தங் குழலோடொப்புக்காணுமிக, நவையெயிற்றெண்ணிக்கூரெயிற்றுக் கொடுவெம்புலியுநயந்துதசை, கவர்தல்செய்யாதெஞ்ஞான்றும் பசுந்தோட்டறுகுகறித்திடுமால்.(யரு)

புழுவுந்தசையும்வெண்ணிணமும் பொதிந்தகுரம்பைவீக்குதற்கு, கழியூனுகர்ந்தோர்கொடுநரகிற்கற்பகாலங்கடந்துழந்து, விழைவின்முன்னர்த்தாமுகர்ந்த விலங்குமவர்தம் மெய்த்தசையை, டழிவெப்பசியாற்பறித்தருந்த லென்னும்பான்மையறிந்தேயோ(யசா)

கொன்றுவிலங்கின்றசைநுகருங் கொடுமையோரவ்விலங்கினுடற், றன்றுமயிரொத்தனையாமத் துணையகாலப்வெந்நரகி, லென்றினுகவாட்புழுவொழுக வுழப்பரென் கையுணர்ந்தேயோ, கன்றுசிலைவெங்கொடுவிலங்கும் புலைநூன்றின்னக்கருதாவால்.........(யஎ)

ஒருமீன்புலவுவாய் மடுப்பின் றெழுபிறந் தசைகளனைத்தினையும், பரிவானுகர்ந்தோர்வீழ்கின்ற பாழ்வெந்நரகிற் படிவரென்னும், மருமாமறையின் பொருடேர்ந்தோ வந்தாமரைநாண் மலர்ப்பொதுளும், விரிநீர்வாவி பயின்மீன்கள் விழுங்காதுலவும் புள்ளினமே.

நசையாணறவு வாய்மடுத்தோர் நரகிலளப்பி னூழூழ்நி, வசையா மீட்டுங் கள்ளுண்ணு மாந்தராக நிலத்துதித்து, மிசையாதன வு மிசைவரெனும் வேதமொழியின் பொருளுணர்ந்தோ, ரிசை தேர்சுரும்பர் மதுகரமென் றிருந்துந்தேற லருந்தாவே ... (௰௯)

சேவலன்ன மணப்பதற்குச் செல்லவிருடி யுறைவிடமென், ஞாவியனைய பெடைவிலக்கு மந்தண்மாவி னிணர்க்குயிலும், கூவல் செய்யாப் பவக்கடலைக் குழவிமறி வேணியனன்றி, யாவர்கடத்து வாரென்னாப் பூவைகிளியோ டியம்புமால்................ (௨௰)

இனையதாயவாச்சிரமத்தெறிக்கும் வடவைப்பேரொளியுங், கனை வெங்கதிரு மொருங்கெழுந்து கதர்விட்டெறிக்கும் பான்மையென த், தனிநான்மறையோர் வடிவெடுத்த தன்மையென்ன வொளி தழைத்து, வினைதீர்தவத்துக் குறைமுனிவ னுறைதன்னைக்கி விழி களித்தார்...................................................... (௨௧)



மடமென்பிணையி னினம்புனிற்று மறியுந்தறுகட் கூரெயிற்று, கொடுவெஞ்சினத்த புலிப்பறழுங் குலவியாடு முற்றத்துக், கடவுட் கற்பி னிகரிலலாக் காதற்பன்னி கமலமல, ரடிமென்சுவடு கண்ணு றனு மமரர்யாரும் வணங்கினரால் ...................... (௨௨)

குறைகூறுதற்கு வந்தடைந்த குலிசப்படையோ னாதலமரர், நறவூற்றிருந்த பொதியவிற்கு நளிமென்கமல மலர்ப்பொகுட் டின், உறைவோனென்ன வினிதியற்றும் யோகமொழிந்து வீற்றி ருக்கு, மறையோன்கமல முகநோக்கி வாழிவாழி யெனவுரைத் தார்..............................................(௨௩)

எத்துமமரர்தமைநோக்கி யெழுந்தமுகமனினிதியம்ப, வாய்த்தி தியுவந்தாங் கவர்க்கியன்ற விருக்கையிருந்து வானுலக, நீத்தெங்குடி லிற் புகுந்ததென்னை யென்றுனெறியிலைப்பொறியுங், காத்துமறை யின் பொருடெரிந்த கடவுட்பெருமா தவத்தோனே...... (௨௪)



மூன்றாவது, தேவர்கள் அகஸ்தியர் ஆசிரமத்தில்வந்தது

அத்தியாய - முற்றிற்று. ஆ விருத்தம் - ௱.



நான்காவது,

# கற்பிலக்கணங்கூறிய அத்தியாயம்.

கலிவிருத்தம்.

தீதெறிந்த தமிழ்முனிசெப்பலும், யாதுசொற்றனர் விண்ணவ
ரொன்றருள், மாதவத்தினர் கேட்பமகிழ்வுடன், சூதமாமுனி சொல்
லலுற்றனரோ ........................................ (க)

அரியநான்மறை தேருமகத்தியன், பரிவினன்மொழி கேட்ட
லும்பண்புடைக், குரவன்வாண்முக நோக்கினர்கோதிலா, விருவி
சும்பி னிமையவர் யாருமே........................................(உ)

பனிவிசும்பி னிழிந்துபரிவொடும், புனைகருங்கழல் விண்ணவர்
போந்தமை, முனிவகேட்டி மொழிகுவல்யாமென, வினிதினந்
தனை நோக்கியியம்புவான்........................................(௩)

மன்னுகானினு மோங்குவளாயினு, முன்னருந்தவ மாற்றுமுனி
வரி, லன்னமூர்த்தியை யம்பியருந்தவ, நின்னையொப்பவர் நீணிலத்
தியாவரோ........................................ (௪)

கங்கைசூடிய கண்ணுதற்சாமிதன், பொங்குபேரருள்பூண்டவ
ருந்தவ, வங்கண்வானத் தமரர்குறையுறி, னெங்குமேவுவர் நின்னி
டத்தன்றியே........................................ (௫)

செயிரில்கற்பின் றிகழ்மணிக்குலந்தனை, மயிலன்னாளின் மனைக்
குரியாளெனி, லுயரருந்தவ வுன்றனுளத்திடை, முயலிலேது முடி
த்தற்கரியதே........................................ (௬)

விளங்கருந்ததி மேனகுநீதியுட், விளங்குசாவித் திரியனைய
னின், களங்கமற்றதோர் கற்புடையாளொடு, முளம்பொருந்தி நிகர்
சொலவொண்ணுமோ........................................(௭)

கொழுநனுண்டபின் றானுகர்கொள்கையும், விழித்துயின்றபின்
றான்சலும்மென்றுயி, லெழுதன்முன்ன மெழுதலும்மயன்மேறு, பழு
தில்கற்புடைப் பாவையர்செய்கையே........................................ (௮)

எரிமணிப்பொலம் பூண்சுமந்தின்னுயிர்க், குரியகேள்வருவப்ப
முன்னெய்துவார், பிரியுங்காலையிற்பெய்கலன்யாவையு, மொருவி
மாசுடனுண்டிடவைகுவார்........................................(௯)

இனியகேள்வர் முனியினெதிர் நின்று, நுனிசொ னெஞ்சொ டெதிர்மொழிசொல்கிலா, ஈனையகேள்வ னெறியினுமன்பொடுங், கனிவர் நெஞ்சகங் கற்புடைமாதரோ..........................(௰)

எய்துமிற்றுறந் தேகலரில்லகல், தையலார் முகங் காணினுஞ்சாய்ப்புவார், மையில்காதலர் வந்தெவையாயினுஞ், செய்திலொன்றனுஞ் செய்தனமென்பரால்.............................. (௰௧)

விழைவுகண்ணுறன் மேதகுநோன்புறல், பழுதிற்றாநதி யாடுதல்பண்ணைவர்த், தொழுதுவாழ்த்துத லேருமறுகற்பினோர், கொழுநரேவலி னன்றிக்குறிக்கொளார்...............................(௰௨)

வினையுந்தங்கலன் மாற்றவட்கியினு, முனிவுசெய்திலர் மூப்பினர்சேர்வுறுத், தனியிற்சேர்கலர் தாம்பிறரிற்புகார், புனிதநெஞ்சுடைப் புண்ணியமாதரோ.............................. (௰௩)

திருந்துமாயுள் சிதையுமென்றெண்ணித்தம், பொருந்துகாதலர் நாமம்புகன்றிடார், இருந்தபோதன்றித் தாமுணிருந்திடார், அருந்துமிச்சி லமிழ்தினுகர்வரால்.............................. (௰௪)

அறந்தவாத் தமதன்பருளினுந், துறந்துளோர் பிறப்போர்தொழில்செய்குநர், சிறந்ததொல்குலத் தெய்வம்பசுவிருந், திறந்துளோர்க்கும் பகுத்தினிதுண்பரால்.............................. (௰௫)

மேவுகாதல ருள்ளம்விழைந்தன, வேவுமுன்னர் குறிப்பினியற்றுவார், தாவிலன்பா தமையலர்தூற்றிடும், பூவையன்னவர் புன்புகநோக்கிலார்.............................. (௰௬)

இல்லறத்திற் கினையவனவிட்டுவா, நல்லசெட்டே வழிநினைழித்திடார், புல்லுகாதல ராயுட்பொலிவுற, மல்லலோங்கணி மஞ்சளணிவரால்.............................. (௰௭)

கொழுநன்சொற்கடவாதுறை கொள்கையே, வழுவினல்லறம் வான்றவமாற்றுத, லொழுகுதெய்வம்பராய்மலர்தூவுதல், பழுதில் கற்புடைப் பத்தினிக்கென்பவே..............................(௰௮)

அழகிலீர்க்கஞ் சிறிதிலராயினு, மொழிவிறேறுந்திரம் புற்றனராயினுங், கிழவுத்தன்மைய ராயினுங்கேள்வனைப், பழுதுசொற்கலர் பணியின்முயபருவார்.............................. (௰௯)

அன்பர்துஞ்சிடிற் றுஞ்சுதலாங்கவர், றுன்பமெய்திடிற் றுமு
மத்துன்புற, லின்பமுற்றிடி லின்புற்றிருத்தலே, மன்பெருந்தகைங்
கற்புடைமாதர்க்கே........................................ (௨௰)

வாள்விழிக்குல மங்கையரன்பர்பொற், றாள்விளக்கிய தண்புன
ற்கங்கையுயக், கேள்வரோகிளர் தேவர்கண்மூவரி, லாளுமெய்ம்மை
யடிகளென் றெண்ணுவார்........................................ (௨௧)

ஆன்றகற்பினர் பூப்பினகன்றுறை, மூன்றுநாளு முகமலர்காட்
டலர், தோன்றயார்துஞ்சொல்லார்புனலேய்ந்தபின், சான்றகாத
லர் தம்முகநோக்குவார்........................................ (௨௨)

புனிதமாநதிப் பூம்புனலாடுநா, ளினியகாதலர் வேற்றிடமெய்
திடி, லனையகேள்வரையன்பின்மனக்கொடு, பனிவிசும்பிற் பரிதி
யை நோக்குவார்........................................ (௨௩)

வசையில்காதலர் தாய்தந்தைவருகில், யசைதியாடில ரன்ப
ரழைத்திடின், மிசையுநல்லமு தேனும்விடுத்துநர், நசையினோடு
பொருக்கென நண்ணுவார்........................................ (௨௪)

தாதைதன்னினுந் தன்னையர்தம்மினு, மாதர்மென்மொழி மை
ந்தர்கடம்மினுங், கோதில்கற்புடை யார்தங்கொழுநர்பாற், காதல்
கூர்ந்து களிமகிழ்வெய்துவார்........................................ (௨

உரவிலக்ஷ்மியி லோங்குமலர்க்கையிற், பரவும்வாயிற் படியின்
முறத்திணிற், றிருவகற்றிடு மாலெனச்சேர்ந்திரார், பொருவில்கற்
புடைப் புண்ணியமாதரே........................................ (௨௬)

உரியகேள்வருவந்துபணித்திடா, தரியநோன்பொடு பூசனை
யாற்றுவார், கரியகூற்றுவன் றூதர்கடிந்திட, வெரியுந்தீநரகத்தி
டை யெய்துவார்........................................ (௨௭)

கடிமணஞ்செயுங் காதலர்தப்பழி, மடமையோடு மொழியவர்
மற்றவ, ருடன்வெகுண்டுரையாடுநரோரியாய், முடுவலாகப் பிறப்
பர் முடிவினே........................................ (௨௮)

கொழுநர்சீறிற் குறுகிமுன்னைபவ, குழூஉவையாகப் பிறப்பரு
குத்தநெஞ்சு, சபலமாற்றவட் சீறுமறிவிலேலார், கழல்கட்கூகைப்
பிறப்பிற்கழிவரால்........................................ (௨௯)

ஏதிலான்ற னெழில்கண்டுவப்பவர், பேதுசெய்துழல் பேயுருவெய்துவார், காதலன்பசிக்கக்களித்துண்பவர், பாதகருஞ்செயும் பன்றியிற்றோன்றுவார்.......................................... (௫௰)

மருவுகாதல ராருயிர்மாய்ந்திடி, லெரியின்மூழ்கி யிறந்துபடுவதற், கருநெறித்தலை வைக்குநன்மாதர்கள், புரவிநன்மகப் பேறுபொருந்துவார்..........................................(௫௧)

மூற்றுச்செந்தழன் மூழ்கியகற்பினோர், புற்றராக்கொடு புள்ளரசேகல்போ, லெற்றுகால படர்க்கைப்பறித்தினி, துற்றகேள்வரொடும்பரிணைகுவார்.......................................... (௫௨)

கொழுநன்பாவி யெனினுங்கொழுநனோ, டழலின்மூழ்கினள் கற்புடையாளெனின், விழியிலன்ன வட்காணில்வெங்கூற்றுவ, னுழுவலன்பனைக் கைவிடுத்தோடுமே.......................................... (௫௩)

வடபுலத்து வயங்குமருந்ததிக், கடவுட்கற்பினர் காந்திதங்கண்ணுறிற், படர்சிலைக்கனல்வெங்கதிர்பான்மதி, சுடர்மழுங்கிப்பொலிவிலதோன்றுமால்.......................................... (௫௪)

நீடுகாதல னோடுயிர்நீத்திடும், வீடில்கற்பினள் மெய்ம்மையிலொன்றினுக், காடகப்பசும் பொன்னிலத்தாயிரங், கோடிகாலங்கொழுநனோடின்புறும்.......................................... (௫௫)

கற்புமேய கனங்குழை மாதரைப், பெற்றுளோர்தம் மரபும் பெருந்தவக், கற்பினாற்கொண்டகாதலனாருயிர்ச், சுற்றம்யாவுந் துறக்கத்தினெய்துமால்.......................................... (௫௬)

பொருவில்கற்பின் வழீஇயபுன்மங்கைப, ருரியமூன்று மரபினுள்ளோரையும், வெருவந்தேங்கி விழுங்கியுமிழ்கிலா, வெரியுந்நரகிற்குடியேற்றுவார்.......................................... (௫௭)

நண்ணுகற்புடை நங்கையர்சீறடி, மண்ணினெய்விடந்தோயினு மற்றம், தெண்ணுகின்ற தலங்களெவற்றினும், புண்ணியத்தல மென்றுபுகல்வரால்..........................................(௫௮)

கவ்வைவெண்டிரைக்கங்கைமுதலவாந், தெய்வமாநதியாவுஞ்செறிந்ததம், வெவ்வமற்றிடக்கற்பினையந்திடு, நவ்விநோக்கமடமாடனையக்குமால்.......................................... (௫௯).

மண்ணுநன்மணிவேய்ந்தவயங்கிய, வண்ணமாடங்களாயினு
ங்கற்புடைப், பெண்ணினல்லவ ரில்லெனிற்பேய்க்கண, நண்ணுகி
ன்ற வனமெனநாட்டுவார்.......................................... (சய)

காற்றும்வெய்ய கனைகதிருங்கடற், றூற்றுதண்ணில வுஞ்சுடர்த்
திங்களும், போற்றுகற்பிற் புரிகுழற்பூங்கொடி, மேற்றொடும்பொ
ழு துள்ளம்வெருவுமால்.......................................... (சக)

மேவுகாதலன் வியப்புனல்பொழி, காவியங்கட் கலன்கழிமாத
லா, யாவிநீத்துக் கிடந்திடும்யாக்கைபோல், யாவருந்தொட றீதெ
ன்றியம்புவார்.......................................... (சஉ)

மாற்றருங்கல னீத்தமகளிரை, யாற்றெதிர்ப்படி னேகலநாயலா
ற், போற்றிவாழ்த்துதல்பூண்கழிமாதரில், வேற்றுமாதர்சொல்வெ
வ்விடமென்பரால்.......................................... (சங)

கைம்மையாகிய கற்புடைமங்கையர், தம்மொழுக்குந் திறம்பிடி
ற்றுமலா, லம்மதங்குலத் தோரையுமாரழல், வெம்மைசேர்நரகத்தி
டைவீழ்த்துவார்.......................................... (சச)

நிழல்செய்பொற்கல னீத்தமடந்தையர், குழலினைக்குறை யா
துமுடித்திடி, லழல்கட்கூற்றுவன்றூதர்மற்றுங்கவர், விழையுங்கே
ள்வனைப் பாசத்தில்வீக்குவார்.......................................... (சரு)

மருவுகாதலன் மாய்ந்திடின்மங்கைய, ரொருபகற்பொழு துண்
டரும்பாக்கிலை, விரியும்பாயல் வெறுத்துமன் மேற்றுஞ்சி, யரிய
நோன்புக ளாற்றிடவேண்டுமால்.......................................... (சசா)

சுடர்செய்பொற்கல னீத்திடுந்தோகையர், கடவுள்பூசனைகாதலி
னாற்றியு, முடலமானண வுள்ளுயிர்நீத்திடா, தடருமூல மருந்திட
வேண்டுமால்.......................................... (சஎ)

எரிசெய்பொற்கல னீத்தவரின்னணம், விரதம்பூண்டு விழுத்தவ
மாற்றிடிற், பரவுகின்ற பதியுலகெய்துபு, பொருவிலாவரும்போக
நுகர்வரால்.......................................... (சஅ)

இன்னவற்றுளியம்பியகற்பின, லன்னைநின்னிடத் தெய்தினளா
தலி, னுன்னையேத்தி வினையொழிந்தோமென, மன்னுமாதவன் ப
ணிந்தவாழ்த்தினர்..........................................(சகூ)

பொருவில்கற்புடை யாள்பதம்போற்றிய, தெருளுநெஞ்சுடை விண்ணவர்தேசிகன், முரிதிரைக்கட லுண்டமுனிவனைப், பரவியின் மொழி பற்பலகூறுவான்.......... (ருய)

குடிலைநீயிவள் கோதறுமாமறை, வடிவினற்றவ நீயிவள் வான் பொறை, யடிகளாதலினின் னுளத்தாயுங்கான், முடிவுறாதனவில்லை மொழியினே.......... (ருக)

ஐயவானதமரர்கள்யாவருஞ், செய்வதொன்றிலராகித்திகைப் புற, மையல்விந்தம் வளர்ந்ததுவானுற, வெய்யவஃறடந் தேனை விலக்கியே.......... (ருஉ)

பொன்னங்குன்றொடிகலிவிண்போருய, என்னவெற்பின்வலி யையடக்குவார், முன்னமேழ்கட லுண்டமுனிவர, நின்னையன்றி நிகழ்த்திடின் யாவரோ.......... (ருங)

என்றுதேவர் குரவனிசைத்தலுங், குன்றின்வீக்கங் குறைப்பல மாறநீர், சென்றுநும்பதி சேர்கெனவோதினன், துன்றுவேலைப் பருகியதூயவன்.......... (ருச)

நான்காவது - கற்பிலக்கணங்கூறிய-அத்தியாயம்-முற்றிற்று.



ஆக-விருத்தம் - ௱ருச.



ஐந்தாவது,

## அகஸ்தியர்விந்தத்தையடைந்த

## வத்தியாயம்.



* கலித்துறை.

விண்ணவர்யாவரு மேகியபின்னர்விரிகொன்றைக்... *
கண்ணிமிலைச்சுஞ் செஞ்சடைமுக்கட் களிற்றன்னை *
யெண்ணிமனத்தா லைம்புலனென்னு மிகல்செற்றோ *
னண்ணுமுலோபா முத்திரையோடு நவில்கின்றான் *

---

* யாப்பருங்கலம் ஐஞ்சீரடியினடித்தொகை நான்மையோ-டெஞ்சா தியன்றனவெல்லாங் கலித்துறை.

குன்றமனைத்தும் வார்சிறைபீர்ந்த குலிசத்தோ, னின்றொருவெற்றை யடக்கும்வலித்திற மில்லான்போல், நின்றதவத்தைநிரப்பும் வேதியனென்றுமெ, னன்றுகொனம்முழை வந்ததுகற்பி னலமிக்கோய்.......... (உ)

பன்னிருவெய்யவ ரீறுசெய்கூற்றுப் படர்செந்தீ, மன்னியவட்டவசுக்கண்மருத்துவர் வானோர்க, ளுலகினுமண்ட மனைத்துமடிந்திடு மெல்லார்போ, லென்னுழையெய்தி யிரந்தமையென்னுறி லென்னேயோ.......... (௩)

இருநிலமேத்திய காசியில்வாழ்தற் கிடையூறு, வருமெனமாதவ ரோதியமாற்றம் வழுக்காகும், பொருவறுதேவரு நம்மையிரந்து புகன்றார்பூங், கருநெறிசேர்தரு டென்குழலிங்கது கண்டேமால்.

தத்துவம்யாவு முணர்ந்துதனிப்பொரு டாகிக், கைத்தலமேவிய நெல்லியெனும்படி கண்டோர்கள், சித்தமுவந்துறைகாசியி லீசன் றிருவுள்ள, மித்திறமாக விளைந்திடின்மாற்றுவ தெவ்வாறே.

மெல்லியபங்க னுவந்துறைகாசியை விட்டேனைத், தொல்லைநெடும்பதி தன்னைவிரும்புதல் சூழுங்கா, னல்லமிர்தந்தன தங்கையிருப்பவு நச்சாமற், புல்லறிவோடு புறங்கையைநக்குதல் போலாமால்.......... (௬)

அறத்தினிருப்பிட மாகியகாசி யடைந்தோர்கள், வெறுத்தறிவில்லவர் போலதுதன்னைவிடுத்தக்கால், மறுத்துநினைத்திடிலெய்துவதெங்ஙன மாசின்றித், திறப்படமுத்தி விழைந்தவர்விட்டயல் செல்லாரோ.......... (௭)

மூவரிருப்பிட மாய்முகிலூர்தி முதற்றேவர், மேவருதற்கரி தாயருண்முத்தியிம் வீடாயிப், பாவமகற்றுறு காசியில்வாழ்வுபடைத்தோர்கள், யாவரவர்க்கரிதாயவிழுப்பொருள் யாதேயோ..(௮)

வையகமேழு மிடிந்திடுகாலையு மாயாதே, யையனெடுந்தோளிர் சூலநுதிக்க ணமர்ந்தோங்கு, மெய்யுணர்வோருறை காசியைவிட்டொரு நற்றுண, மெய்தமனத்தை விடுக்குநர்பேதைமை யென்னேயோ.......... (௯)

மாசறுபேதைமை தம்மைமறைப்ப மறைந்தாரு, லாசையெனுஞ்சுற வெற்றுபவக்கட லாழ்கின்றோ, ரீசனுவந்துமை யோட

கலாம விருந்தோங்கு, காசியெனும்புணை யன்றியெவ்வாறு கடப்பாரோ........................................................(௰)

செய்யவழுத்தலை நின்றுதவம்பல செய்தாலு, மெய்தருய்யோக மளப்பிலநாளு மிழைத்தாலு, மையறுகாசியை வார்பிறைசென்னி லணைந்தாலு, மையனருட்சிறி தின்றியடைந்திட லாகாதே... (௰௧)

அறம்பொருளின்ப மியற்றுதவத்தி னடைந்தாலுங், கறங்குதிரைக்கட னஞ்சநுகர்ந்தருள் காமாரி, யுறைந்தவளங்கெழு காசியி னல்லதை யொன்றானு, மிறந்துபிறந்துழல் வோர்தனிமுத்தியி னெய்தாரோ...........................................(௰௨)

அருமறையாகம மாகியநூல்க ளனைத்தேயும், பொருவறுகாசியை யன்றிவழுத்தல் பொருந்தாவா, லிருவினைவிட்டொரு மும்மலமாயை யிகழ்ந்தோர்கள், திருவமர்காசியை விட்டயலோர்பதி செல்லாரே........................................... (௰௩)

இடைகலைபிங்கலைவாலைசிறந்துடனிலவுகூடு, முடிவறுவாரணசி நடுவுயர்சுழிமுனையென்று, விடையமறுத்துயர்மெய்த்தவமேவிய காபாலி, யடைவினுரைத்தனனிந்நகருக்கிணையாதேயோ... (௰௪)

இத்தலையெய்தியிறக்குநர்யாருமிளைப்பாற, வுத்தரிகங்கொடுமானு மைவிசிடவுமையோர்பால், வைத்தவருட்பொருளேயவருந்தாரக மறையோதி, முத்தியளித்திடுமிப்பதியார்விட முயல்வாரோ...(௰௫)

ஆசில்வளங்கெழுமூவுலகத்தினுமாயுங்கால், காசிநகர்க்கிணையாகிய நற்பதிகாணேமால், மாசறுதிங்கண்முடித்துயர்மன்றுண்மகிழ்ந்தாடு, மீசனையொப்பவர்தேவகணத்திடையாரோயோ....., (௰௬)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

என்றுகுறுமுனிநினைந்து காலராசனையருள்கூரியக்கர் கோனைத், தன்றமரார் முற்பிரமம் சம்பிரம மேத்துதண்ட தரனையார்க்குந், துன்றுபவக்கடல்கடத்துந் தண்டிவிநாயகனை வரிச்சுரும்பர்வீழு, மன்றனறு மலர்தூவிச் செய்யபொலந் தாமரைத்தாள் வணங்கி யேத்தி.................................................(௰௭)

ஆசாவிசை காசிசிந்தா மணிபோற்றி சித்திவிநா யகனென்றுய, தேசாரும் விநாயகரோ னாவரடி பணிந்துவரிசிந்திநீண்ட, வேசா நல் லெழிலுண்கட் கொற்றவைதல் றுணைப்பாத மிறைஞ்சினுஞ்

சீர், யேசாரிற் றமியனையிக் காசியைவிட் டகற்றுவது பெருமைத் தானே......................................................(௰௮)

தேவருறு பகை தொலைப்பத் ததிசிறநது கென்பளித்தான் றிருமால்வேண்ட, வோவருசீ ரொறுழ்வலித்தோள் கொடுஞ்சிறைய புள்ளரசு மூர்தியானும், மாவலிமூ வுலகளித்தான் மருகையிடவருஞ்சிரமுன் வழங்கினரால், மேவரிய காசியைவிட் டும்பருறு குறைமுடித்தல் விழுமிதாமால்.................................... (௰௯)

என்றினைய பலகூறிக் குழவிமதி புனைசடிலத் தெய்வமர்வ் காசித், துன்றுசரா சரம்பலவுந் தொழுதுவலங் கொண்டகல்வான் சுருங்க வோங்கு, குன்றினுறு வலிதணிப்பான் குறுமுனிவ னேகுதலுங் குழைந்துமாழ்கிப், பொன்றினர்தம் முகம்போன்ற பொலிவழிந்த துயர்விந்தப் பொருப்புமாதோ................................ (௨௰)

ஆற்றலரும் பெருந்தவத்துக் குறுமுனிவன் காசிநக ரகன்றுநா லப், போற்றுபெருங் கற்புடைய லோபாமுத் திரையினொடும் போத லோடு, மூற்றிருந்து நறவொழுகுங் கமலநாய கனியங்கா தும்பர் யார்க்கு, மாற்றரிய வலியுடைத்தா யெழுந்துதிசை யளந்தோங்கும் வரையைக்கண்டான்......................................... (௨௧)

கடலேழு மொருகுடங்கைக் கொண்டகுறு முனிவருதல் காண்டலோடு, முடல்வேர்வு வரவுள்ளம் பதைபதைப்பத் தலைபணிப்ப வுயிர்ப்புவீங்கிப், படிபூடு புகுதுமெனப் பணிந்துமறைக் கிழவ ரொழிற்படிவந்தாங்கித், தடமேரு வுடனிகலும் விந்தவரை முனிவனடி தாழ்ந்ததன்றே.......................................... (௨௨)

நன்றுணைத்தா டொழுதெழுந்த விந்தவரை முகநோக்கித் தவத்துமிக்கோ, னின்றுமுதல் பொதியவரை நீங்கியா னிவ்வுழிமீட் டெய்துகாறு, முன்றனது பேருருவ மிவ்வண்ண மிருக்கவென வுரைத்துப்போனான், றென்றலினங் குழவியொடு தீந்தமிழு மினிதுலவுந் தென்பான் மன்றே......................................... (௨௩)

அருந்தவத்தோ னேகுதலும் விந்தமால் வரையுளத்தினச்சநீங்கிப், புரிந்துபுரிந் தவனேகும் வழிநோக்கி நோக்கியுடல் புளகம்பூப்பப், பெருந்தவத்தோன் சமியாம லேகுதலா லின்றலன்றே பிறந்தோமென்று, வருந்திநனி பணிந்திருப்பப் பரிதிவானவன் மேருவலங்கொண்டானால்......................................... (௨௪)

மலர்தலைய வுலகமெல்லாம் பண்டுபோற் றருமநெறி வளர்ந்த நாளுங், கலனிழந்த மகளிரினை யூஞலைபோல விந்தவனா கவின்க டீர்ந்த, தலைவறுநற் றவமுனிவ னமலனுறை காசிநக ருள்ளத்தோரா, வளர்கமலப் பொகுட்டுறையுந் திருமகள்சேர் சினகரத்தை யடைந்தான்மன்னோ..........................................(உரு)

ஏழுலகுமிடரியற்று மடலவுண ருயிரொழிய முனிவுகூர்ந்த, பூவைபுரைத்திருமேனி யருட்கடவுள் கணமார்பிற் பொலிந்து தோன்றித், தேவருலகினும்விளங்கு புகழ்க்கொல்லாபுரத்தினிது சேர்ந்துவைகும், பாவையிருதாடொழுது பழமறைதேர் குறுமுனிவன் பழிச்சுகின்றான்.......................................... (உசா)

கொழுநியிசை யளிமுரலுந் தாமரைமென் பொகுட்டிலுறை கொள்கைபோலு, மழைபுரையுந் திருமேனி மணிவண்ண னிதயமலர் வைகுமானே, முழுதுலகு மினிதீன்றவருட்கொம்பே கரகமல முகிழ்த்துநாளுங், கழிபெருங்காதலிற்றொழுவோர் வினைதீர வருள்கொழிக்குங் கமலக்கண்ணாய்.................................. (உஎ)

கமலைதிரு மறுமார்பன் மனைக்கிழத்தி செழுங்கமலக் கையாய் செய்ய, விமலைபசுங் கழைகுழைக்கும் வேனிலான்றனையீன்ற வித்தத்தாய, வமுதகும்ப மலர்க்கரத்தாய் பாற்கடலு ளவதரித்தோயன்பர்நெஞ்சத், திமிரமகன் றிடவொளிருஞ் செழுஞ்சுடரோ யெனவணக்கஞ் செய்தான்மன்னோ..................................(உஅ)

மடற்கமலநறும்பொகுட்டி லரசிருக்குஞ் செந்துவர்வாய் மயிலேமற்றுன், கடைக்கணருள் படைத்தன்றோ மணிவண்ண னுலகமெலாங் காவல்பூண்டான், படைத்தனனுன் முகக்கிழவன் பசுங்குழவி மதிபுனைந்த பரமன்றானுந், துடைத்தனனின் பெருஞ்சீர்த்தி யெம்மனோ ராலெடுத்துச் சொல்லற்பாற்றோ................(உகூ)

மல்லனெடும் புவியனைத்தும் பொதுநீக்கித் தனிபுரக்கு மன்னர் தாமுங், கல்வியினிற் பேரறிவிற் கட்டழகி னிகரில்லாக் காட்சியோருஞ், வெல்படையிற் பகைதுறந்து வெஞ்சமத்து வாகைபுனை வீரர்தாமு, மல்லிமலர்ப் பொகுட்டுறையு மணியிழைநின் னருணோக்க மடைந்துளாரோ..........................................(ஙய)

செங்கமலப் பொலந்தாதிற் றிகழ்ந்தொளிரு மெழின்மேனித் திருவேவேலை, யங்கணுல கிருடுறக்கு மலர்கதிராய் வெண்மதியாய

மார்க்கூட்டியும், பொங்கழலாயுலகளிக்கும் பூங்கொடியே நெடுங்கா ணிற் பொருப்பின்மண்ணி, லெங்குளோநீ யவணல்லே மல்லல்வள ஞ்சிறந்தோங்கி யிருப்பதம்மா.............................. (௫௧)

என்றுதமிழ்க்குறுமுனிவன் பன்னியொடுமிருநிலத்தி லிறைஞ்ச லோடு, நன்றுனரு துதிமகிழ்ந்தே னான்மறையோ யித்துதியை நவின்றோர்யாரும், பொன்றலரும் பெரும்போக நுகர்ந்திடுவ ரிங் கிதனைப் பொறித்தவேடு, மன்றமனை யகத்திருப்பின் வறுமைதருந் தவ்வையவண் மருவல்செய்யாள்............................ (௫௨)

அந்தணனின் றுயரறிந்தேங் காசிநகரகன்றவரோ யாற்றவல்லா, ரிந்துவகிர் புனைசடிலத் திறையவனுங் காசிதனைத் தேகியோங்கு, மந்தரவெற் பினையடைந்து காசிபிரிந் துறைவிரகமம்மர் நோயா ல், வெந்துயருற் றவண்மேவ விரிஞ்சன்முதல் வானவரை விடுத்தல் செய்தான்.................................................... (௫௩)

கஞ்சமல ரயன்முதலோர் கண்ணுதல்பான் மீளாது காசிமேவி, யெஞ்சலினல் வளநோக்கி யிருந்தனர்பைந் துளவணியு மெம்மா ன்சூழ்ந்த, வஞ்சனையான் முழுமுதலுங் காசிநகர் தனில்விரும்பிம கிழ்ந்தா னென்று, நெஞ்சுதனிற் காசிதனைப் பிரிந்தேக நினைப்ப வரோ நெறியிலாதார்.......................................... (௫௪)

அருமறையோய் காசிவரு மிருபத்தொன்பானுகத்தி லடைதி யும், குருபரனுப்பக்கலிமுழுது முனக்குணர்த்துசுடர்வடிவேற்கும ரன்றனனை, மருவுவைபின் னகன்றேகி னணித்தாகக் கங்கைநதிவள ங்கொள்காசிப், பொருவருஞ்சீர்த் தலமுழுது மற்றவனே நீயுண ரப் புகல்வனென்றான்........................................ (௫௫)

உரவுநீர்க்கடலேழுமொருகுடங்கை தனிலேந்தியுண்டமேலோ ன், விரைகொள்பூந் தாமரையின் மெல்லியலை யடிவணங்கி விளங் குகற்பின், பொருவில்சீர்ப்பூவையொடுந்திசைமுகனை யருஞ்சிறை யிற் புகுத்துனான, முருகவேளினிதுறையும் பதிதேடி யவம்பாத முன்னிச்சென்றான்........................................ (௫௬)

ஐந்தாவது அகஸ்தியர் விந்தவரையை யடைந்த அத்தியாயம்



முற்றிற்று. ஆகூ விருத்தம் - ௱௬௰.



ஆறாவது,

# தீர்த்தமகிமையுரைத்த அத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

அங்கணுலகிருணீக்கி யருந்தவத்தோ னேகுமொரு நெறியினுப்
பண்-டிங்களிளம் பசுங்குழவிக் கோமுரிஞ்சநறியமுழைச் சிதைந்து
தண்ணெனவ்-கொங்குகமழ் நறுங்கொன்றைத் தேனருவி யலைத்தொ
ழுகு கோடீரத்துக்-கங்கைநதி புவட்டெடுக்குங் கடவுளுறை திருச்
சைலங் கண்ணுற்றானே.................................... (க)

கலிவிருத்தம்.

பன்னிகேளிப்பருப்பதம்யோசனை - புன்னிலெண்பத்து நான்
கனேர்ந்திடு - மன்னுமியாவு மிலிங்கவடிவின - துன்னுவார்தம்
பவங்க ளுடைக்குமால்.................................... (௨)

ஆதலாலிவ்வரைவலங்கொண்டலாக், போது தூவிப் பணிகெ
னப்பொற்றொடி, யீதுநண்ணிற்பிறப்பறு மென்றிடற், கீதில்காசி
யைச் சிறந்திப்பதென்கொலோ.................................... (௩)

என்றுபன்னி யியம்பலுமுத்திவீ, டொன்றுநல்கு பதிபலவுண்
டென, மன்றநற்றவ ரோதினர்மாணிழை, நன்றுகேட்டி யெனந
வின்றானரோ.................................... (௪)

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

அதிர்புனற்பிரயாகை விளங்குமோங்கார மவந்திகாலாஞ்சர ம
யோத்தி, மதுரைகோகன்னம்புட்கரம்பிரபாசம்மகராலயந் துவா
ரகைகாஞ்சீ, வெதிரிகாச்சிரமந் திரியம்பகங்கங்கைவேலையிற்புகுமி
டஞ்சிந்து, நதிசரச்சோதியோ டொன்றிடங்குருக்ஷேத்திரமொடு
நயிமிசாரணியம்.................................... (௫)

விரிபுனற்கங் காத்துவாரை நற்றுறக்கம் வீடருணீடருச்சைலம்
பிருகுகச்சஞ்சீர்பெற்றுயர் பிருகுதுங்கமென்றின்னவையன்றித், த
ரைபுகழ்தாராதீர்த்தம்வெண்டரங்கச் சத்தகோதாவிரித்தடமென்,
றுரைபெறுகடவுட் டீர்த்தமாநிலத்தி லுண்டெனவோதினருயர்ந்
தோர்.................................... (௬)

சத்தியந்தானஞ்சம்மதமின்சொற்சாற்றுதலொருவழிப்படுதல், புத்தியேமுதலகரணமோர்நான்கு மடக்குதல்புலன்கள்போய்வழி யி, னுய்த்திடாதமைத்தல் பொறைதிடஞான முயிர்க்கெலாந்தண் ணளிபுரிதலித்திறமனைத்துமானததீர்த்த மெனவெடுத்தியம்பினர் மேலோர்.......... (எ)

அறத்துறைபயிலுமானததீர்த்தமாடலராகிநீராடிற், புறத்தழுக் கொழிவதல்லதுபுனித ராகிலர்பூந்திரைசுருட்டுஞ், சிறைப்புனலத னின் முழையுறப்பகுவாய்த் தீவிழிச்செறியெயிற் றிடங்கர், சுறக் குலமுதல வளப்பருங்காலந் தோய்ந்ததாற்றுறக்கமுற்றனவோ. அ

கலிவிருத்தம்.

முனைக்குறைவிலாதவர் மொழியுந்தெய்வநன், னதிப்புனலாடினு நவையுநீங்கலா, மனக்குடம்பன்முறைவரம்பின்மாநதிப், புதுப்பு னலாடினும் புனிதமெய்துமோ.......... (௯)

கற்றதங்கல்வியுங் கடவுட்பூசையு, நற்றவமியற்றலு நவையிறுனை றுடம், மற்றுளவறங்களு மனதின்பாலழுக், கற்றவர்க்கேபய னளிக் குமென்பரால்.......... (௰)

பொறிவழிப்புலன்செலா தடக்கிப்புந்தியை. நிறைபரம்பொரு ளிடை நிறுத்திநின்றல், றுறைவிடமல்லதை யுள்ளந்தாங்கொலோ, வெறிபுனற்றீர்த்தமென் றியம்பப்பட்டதே.......... (௧௧)

உணர்ப்பெருமானத தீர்த்தமோவிடிற், சுருக்கமின்ஞானநீர் தோய்தன்மற்றது, விருப்பொடுவெறுப்பென விளம்பப்பட்ட தோர், கருப்புகுத்திடுமலங் கழுவுமென்பவே.......... (௧௨)

உடலுறுமலையவந் துத்தமாங்கம்போற், றொடுகழல்வரைப்பி னுட் டோயுமாற்றினுட், கடவுண்மாநதியுள வவற்றிற்காதலாற், படிகுநரழிவிலாப் பதத்திற்சேர்வரால்.......... (௧௩)

புண்ணியதீர்த்தங்கள் பொருந்தியாடினோர், மண்ணிடைப்படு மவைகள் விலங்குமறுள, வெண்ணறுமியோனிகள் யாவுமெய்தி டார், விண்ணுடைக்கடவுள ராகிமேவுவார்.......... (௧௪)

அறத்திறந்திறப்பினே ருருளிலாதவர், துறக்கமொன்றில்லெனச் சொல்லுப்புன்மையோர், சிறப்புடைப்பயனுறுந் தீர்க்கஞ்செய் குனர், பெறற்கருந்திரத்தற பயன்பெறுநர்களே.......... (௧௫)

அருளுடைத்தீர்த்தங்க ளாடவேண்டினோ, ரொருபகலுணவொ ழிந்து தொழுகுழும்மதக், கரிமுகன்றுளிணைக் கருதிமற்றைநாட், பரிவொடுபாரணம் பண்ணியேகுவார்.......................(௰௬)

மன்பெருந்தீர்த்தங்க ளாடிமாநிலம், பொன்பசுமுதலிவை வழங்கிப்பூசுரர்க், கன்பினுலமுதுற வூட்டிப்பின், றென்புலத் தவர்கடன் செய்யவேண்டுமால்..........................(௰௭)

ஒருத்தனைத்தன்மனைத் துன்னிவான்புனற், றிருத்தகுதீர்த்தங்க ளாடல்செய்திடிற், றருப்பையாலவனுடை றன்னையொப்பதோ, ருருப்படவியற்றுநல் லுதகமாட்டுவார்....................... (௰௮)

ஆடகமளித்துநீ ராடிவித்தவர், கூடுவரோரிரு நான்குகூறுமற், றூடுநரொருபதி னுறிலொன்றதாங், கேடில்பேறடைகுவா கிளக்குங்காலையே.......................................... (௰௯)

அலைபுனற்றீர்த்தங்க ளடைந்தவற்றைநா, ளுலைவறப்பாகிலை யுண்டிநீத்துப்பின், றலைமயிர்குறைத்துநீர்த் தடத்துமூழ்கிடி, னிலைபெறுபாவங்க ளனைத்துநீங்குமால்.............................. (௨௰)

காசிமாயாபுரி யவந்திகாஞ்சிமற், றேசைகொளயோத்திவண் டுவரையொப்பறு- மேசிலாமதுரையென் றிசைக்குமேழ்பதி- மாசறுமுத்தியை வழங்குமென்பவே.............................. (௨௧)

ஒலிபுனற்பிரயாகைகேதாரமோங்குசீர்- மலிதிருச்சைலமென் றுரைக்குமாண்புடை - நிலைபெறுதலங்களு நினைத்தற்கெய்துறு-வலைவறுமுத்தியை யினிதளிக்குமால்................................(௨௨)

நெடுநிலவரைப்பினி னிகழ்த்துதானங்கண் - மடிவறுமுத்தியை வழங்குமென்றது- கடலுணீர்க்கங்கைசூழ் காசிமாநக- ரடைவதற் கேதுவாயமைந்தவாற்றினுல்..............................(௨௩)

ஏர்தருதானங்கள் யாவுங்காசிபோன்- மேதகுமுத்தியை விளைத்திடாவெனச்- சீதரன்கணத்திறோர் சிவசன்மாவினுக் - கோதியகதையினை முனிவரேறுவான்..................................(௨௪)

அறுவது - தீர்த்தமகிமையுரைத்த - அத்தியாயமுற்றிற்று.



ஆ-விருத்தம் - ௨௱௰௪.



ஏழாவது

# சத்தபுரியின்சிறப்புரைத்த

## அத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

மல்லல்வளஞ்சிறந்தோங்கு வடமதுரைப்பதிதனிலோர் மறைவ
லாள - னெல்லையினற்றவமாற்றி யினிதீன்றசிவசன்மா வென்போ
ன்மேனாட் - டொல்லைமறைப்பொருளோராந் தாதுகளாறு சீர்ப்பல
கலையின் றுறைகள்போகிக் - கல்வியெனும்பெருங்கடலின் கரைகட
ந்துநிமிர்பீட்டிக் களித்தானன்றே.............................. (க)

இபற்றரியபலவினையும் யாவுமுயன்றாற்றிய மெனத்துமீட்
டி - யுயிர்க்குயிராமழலைமொழிக் கின்கிளிக்காற்சிறுவர்களை யுவப்
பினீன்று - பயிர்ப்புறுமிற்கிழத்தியொடு மளவிகையர்கோனெனப்
போகம் பலவுந்துய்த்து - வியப்பொடுதன்புதல்வர்பெற வீட்டு
நெறியனைத்தினையும் விழைவினீந்தான்.............................. (உ)

மழவிடைபோற்செம்மாந்து மகளிர்வரிவிழிகளிப்ப வாழுநா
ளீபோ - யெழிலிளமையுருவகலக் கோளூன்றிநரைதிலாவந் தெய்
துநோய்செய் - கிழவுறலுமறனியற்றுநித்துணைநாள் கழிந்ததெனக்
கேடுநெஞ்சங் - குழைவுறக்கண் பனிதூங்கச் சிவசன்மாவுளத்தினி
டைக் குறிதலைசெய்தான்.............................. (௩)

தாளாண்மை யுடலிதியம் பன்வீட்டி விருந்தயிருந் தர்க்கமே
ற்று - வாளாதற பகலனைத்துங் கழித்தனஞ்செஞ் சடைமௌலிவ
நதனைப்பார்க் - காளாகி யாங்கவனைத் தொழுதிலவ்வண் டொழுயலங்க
ல அணையுமலர் - மாளாதவன்பிறைதுடிங் கொழுமலர் தூஉயவணங்கி
யப்புந்திலேன்.............................. (௪)

தூங்கரனைச்செம்மேனி யலர்கதிர்வா னவனையரிந் நமுதங்காலு
நிங்கரியாங் கனனிடுமல செலவிதமாரியாய் பெய்நிலேனின் -
டீங்குறமாந் நியிநெருஞ் சினகரங்கள் டெவுறைய வகுத்திலேன்
வாசம் - பொங்குபுனற டங்கூபங் குளத்தொடுநற் றருமமிவை பு
த்திலேன்.............................. (ரு)

பூசித்தேறன் முருகுநாறு-மள்ளலஞ்சேற் றகல்வயல்சூழ யோத்திமா நகரிதனி லடைந்தானன்றே........................ (௰௨)

சரையுநதிப் புனல்படிந்து தென்புலத்தோர் கடன்கழித்துத் தழல்செய்வேள்வி - யருமறையோ ரினிதுவப்ப வறுசுறழு மின்னடிசி லமையவூட்டிப் - பரிவினொடு மந்நகரிற் பஞ்சராத் திரியுறைந்து பவளஞ்சிந்தி - விரிகதிர்வெண் மணிகொழிக்கும் வீங்குபுனற் பிரயாகைதனின் மேவினானே........................ .....(௰௩)

உடைதிரைநீர்ப் பிரளயத்து மார்க்கண்டன் முதன்முனிவ ருறைவதாய-வடதருவைப் புனிற்றுமதி யலைபுரட்டுங் கங்கையொடு வணைந்தவேணிக் - கடவுளைவெண் மதிகொழிக்கும் பாலாழி துறந்துசெழுங் கமலையோடு -மடியர்துய ரகற்றுவலென் றினிதடைந்த மாதவனை யாங்குக்கண்டான்........................ ..... ...(௰௪)

பெறலரிய தருமத்தின் பேறெல்லாம் விரிதெண்ணீர்ப் பிரயாகையாற்று-ளறலிலொரு நுண்மணற்கு நிகர்தூங்கா கொடும்பாவமனைத்துமன்ன-துறுபெயர்கேட் பினொடுங்கு மாடுநரு மாண்டுவதிந் துயிர்விட்டோருங் - குறைவில்பர கதியடைந்து வீற்றிருப்பரெனமறைகள் கூறக்கேட்டான்.............. ................ (௰௫)

செங்கதிர்ச்செல் வனுமாதி கேசவனுங் கண்களாய்த் தெய்வதன்னீர்ப்-பொங்குதிரை மணிகொழிக்கும் வருணையசிகைகளாய்ப் புனைவிற் றோய்ந்தோர் - வெங்கொடும்பா தகந்துலைத்து வீடுதருந் திருவேணி வேணியாய-கங்கைவிரி புனலாடைக் காசியணங் கினைநோக்கிக் களித்தானன்றே.......... ............................... (௰௬)

மதிதவழு முயர்பொலங்கோட் டிமையநெடு வரைமுதல வரைகள்யாவுந் - தந்தைமலர்ப் பைந் தருமுதல தருக்களுமெண் ணறும்புவனந் தனிலுள்ளோரும் - விதிமுறையி னுங்கடைந்து புகழ்மாகத் திங்கடனில் விளங்கும் வெய்யோன் - கதிர்மணித்திண் டேர்கடவுட் புலரியின்வாய்ப் புனலாடக் கண்ணிற்கண்டான்...........(௰௭)

கண்டுகளி மகிழ்தூங்கி யாங்கதனின் வளமனைத்துங் கருத்தின்றோரீந்து-மண்டுபுனற் பிரயாகை தனிலோர்திங்க ளுறைந்ததற்பின் வளங்கொள்கங்கை-தண்டுறைசூழ் காசிநகர் புகுமளவின் மலர்தூவித் தாழ்ந்துதாழாத்-திண்டிறல்வெங் கரிமுகத்தோ னிலங்குபொலந் தாமரைத்தாள் சென்னிசேர்த்தி........................... (௰௮)

கடவுண்மணிகன்னிகையின்புனல்படிந்துதிளைபுரட்டுங் கங்கை
யாடி, யடைவிலரு முனிவர்கடன் றென்புலத்தோர் கடனாற்றி
யோனைந்தாய, விடயமறுத்திடுமறையோனைம்பெருந்தீர்த்தமு
மூழ்கிவிரிந்தகொன்றைத், தொடைபுனையுமகிலேசன்றாள்வணங்
கியந்நகரைத்துதித்தல்செய்தான்.............. .................(௰௯)

தூயசெழுங்கங்கையிலே சுழித்தெறியும்புனலிலொருதுளியுண்
டோருந், தாய்முலைப்பாண்மீட்டருந்தாத்தன்மையாலாங்குடலி
ந் தனைவிட்டோர்க்கு, வேயனையதோளியங்கன் றாரகத்தை வலச்
செவியில்விளம்பறன்றாற், சேயுயர்விண்ணவருலகோகாசிநகர்க்
கிணையாகச்செப்புவாரே................................(௨௰)

முத்தியளித்திடுநகரிந்நகரொனவேயறிந்துமுதுக்குறைவிலாரிந்,
சத்தபுரியிடத்தினும்போய் வருதுமெனுஞ் சங்கற்பந்தவிரு
மென்றைப், பித்தரிற்றீவினைகள்பிடர்பிடித்துந்தப்புறம்போகிப்
பிறைசேர்வேணி, யத்தனினிதுவந்துறையுமல்லல்வளஞ்சிறந்
தோங்கு மவந்திசேர்ந்தான்................................(௨௧)

ஆதியுகமொழிந்துவருமூன்றுகத்துமகாகாளமவந்திமற்றை,
யோதுவளஞ்சிறந்தோங்குமுச்சினியெனுநகரினுடன்றுகூற்றை
க்காதியிடுமாடகேசுரர்தாரகேசுரர்மாகாளரொன்னச், சோதிவட
தருவினிழலினிதுறையும்பரமனடிதொழுதுபோனான்... (௨௨)

காதலிற்சென்றிறந்தோர்க்குச் சாரூபஞ்சிவனளிக்குங் காஞ்
சிக்கேகி, யாதரத்தினேழ்பகலாண்டிருந்திறந்தோ ரொன்பனைத்
துமலங்கற்றிண்டோட், சீதரன்றன்வளையாழியுருவாகுந்துவார
கையிற்சென்றுபின்னர், மாதவத்தோரொஞ்ஞான்றுமுவந்துறை
மாயாபுரியில்வந்துசேர்ந்தான்................ ... ......(௨௩)

பொன்னகரினுயர்மாயாத் துவாரமென்றும்பொருவிலரித்து
வாரமென்றுந், குன்றுதடங்களாக்கங்கைசுழித்திடையோ தலிற்
கங்காத்துவாரமென்று, மின்னமுப்பெயருடைத்தாய் வைகு
ந்தத்தினிதேறுமேணியாக, மன்னியமாயாபுரியிலினிதிருந்தான
ருந்தவத்துமறைவல்லோனே.............. ...... ...... (௨௪)

தோமறுமேகாதசிநோன்பினிதாற்றிக்கங்குலிடைத் துயிலு
ருமற், பூமகள்கேள்வனைவணங்கிமறுநாட்பாரணமினிது புரியு
முன்ன, ரொழுறுவெப்பொடுகுளிர்வந் தெய்திடவுயிறப்பதனை
யெண்ணிமாயோன், காமருபொற்செழுங்கமலமலர்பொருவுதி
ருசரணங் கருத்துட்கொண்டான்......... .......... ...(௨௫)

வாளமரின்வெருவாதுமருமம்போழ்ந்தயிலுருவ மடிந்து ளோருந், தாளிணைகள்சிவப்பூரத்தீர்த்தயாத்திரைபோகிச்சாகின் றோருங், காளமுகிலெனக்கரியகாலபடர்தமைவிழியிற்காணுமொ ன்று, நாளுமறையுரைப்பதெண்ணிவெருவொழிந்தா னருமறை கணவிலுநாவான்.......................................(உ௬)

வெய்யகொடுநோய்கன்றறவேழுநாள்கழிந்ததற்பின் மேனி வாடிக், கையறவாய்ச்சிவசன்மனிறந்திடலுந் தன்பிளவோன்க ணங்களாய, பொய்யிறவச்சுசீலனுமெய்ப் புண்ணியசீலனுந்தி தலைபூத்துவிங்கு, தொய்யின்முலையரம்பையர்சூழ்விமானமொ டு மிருநிலத்திற்றோன்றினரால்.................................(உஎ)

வளங்கெழுமாயாபுரியிற்சிவசன்மனெனுமறையோன் மாய்த தன்றாற், களங்கனிபோன்மேனியான்சாரூபமடைந்துவரு கண ங்களோடு, முளங்கவருமாமகளி ரொண்மணிச்சா மரையிரட்ட வொளிருஞ்செம்பொன், விளங்குமணிவிமானத்துவிண்ணவர் பூமழைதூவவிசும்பிற்போனான்.................................(உஅ)

எ-வது, சத்தபுரியின்சிறப்புரைத்த-அத்தியாயமுற்றும்.

ஆகவிருத்தம்-உசஉ

எட்டாவது.

## சிவசன்மாவையியமனெதிர்கொண்ட

## அத்தியாயம்.

வேறு.

அன்னமாமுனியியம்புதலு மேழைபுகல்வாள், முன்னமேழ் பதியுநல்கு முயர்முத்தியெனநீ ;சொன்னவாறொழியமாயனது தொல்லையுருவ,மன்னவேதியனடைந்த தெவனென்னவுறவான்

ஆசிலாதபதியாறினுமடைந்திடுதலக், காசியெய்தியுயர்முத்தி பெறுகாரணமதா, மாசிலாவினையவாறுசிவ சன்மனவினவக்,கே சவன்கணமொழிந்ததுகிளக்குவனரோ...........................(உ)

மேவுகின்றகணநாதனாவியந்துமறையோன், யாவுதும்பெயர்நல ங்கிளர்சுசீலனெனவுந், தாவருந்தருமசீல னெனவுந்தொழிலினு, லோவிலன்பொடுநினைத்தனனுரைத்திரெனலும்... .........(௩)

நறையிதழ்க்கமலே கேள்வனடிநன்னுமடியா, ரறிவதற்கரிய தாயபொருள்வேறுமுளதோ, மறையவர்க்கிறைவவெம்பெயர்ம திக்கிலவையே, குறைவினற்கதைகள்கேட்டன குறித்து மொழி வோம்... ... ... ... ... (௪)

என்றுகூறியுடனேகுதலுமோருலகுகண், டொன்றுமிவ்வுலக மியாது விகடங்கொளுருவுங், குன்றுசெல்வமுமுள் ளாரொவர்க ள்கூறுகெனலு, நன்றுகேளெனமகிழ்ந்துகணநாதர்நவில்வார்(

இலகுவெண்பிறையெயிற்றெரிசன்சிந்துபகுவா, யலகைசேருல கடீந்து சுசியின்றியானே, மலர்கவேவினருமின்றென வளித்துமண நோந், ருல்விமேனுடுதுபருற்றவருமிங்குறைவரால் .. ...... ௬)

தாதருந்திவரிவண்டுமுரறண்டுளவினேன், சீதரன்றனதுதாள் பரவுதெய்வமறையோ, யீதுகுய்யகவுலோகமிவணுளுமுறை வோர், கோதில்வெற்றிபெறுகுய்யகரொனப்புகலுவார் ...(௭)

தொகுத்தநற்பொருளறத்தினுயர்தூயவர்பெறப், பகுத்தரு ந்தியிடலின்றியுயர்பாழிவயிலிற், புகுத்திமன்னுயிர்களுக்கிடர் புரிந்திலர்களாய், மிகுத்தவன்பினுறைவாருறைவரொன்னவியவா

ஆங்குறின்றகனு மந்நெறியிலோருலகுகண், டீங்குமேயவுல கெவ்வுலகமென்னவினவத், தேங்கனிந்தொழுகுதெள் விளியு டைத்தநிவ்வியா, மோங்குசெல்வமுறு கந்திருவர்வாழுலகமே()

அரியநல்விரத மாற்றுநர்களன்பினுருக, விருவிசும்புறையும் விஞ்ஞைவரையாழினவில்வோர், புரிநரம்பிசைமகிழ்ந் தரசர்நல் குபொருள்கொண், டுரியதானமுனளித்தவர்க ளிங்குறைவரால்.

ஆதிநம்பனுரு நாதவுருவாகுமெனமுன், றோதுகின்றமறை யாகவுமுரைத்திடுதலாற், கேதமீசன்முன்னுரு நவில்கேண்மை யுடையோர், தீதில்லிவ்வுலகு சேருவரொனுவுரைசெய்தார்...(௰௧)

ஆண்டுநின்றுசெலுமந் நெறியிலோருலகமுன், காண்டலோ டிமிஃதெவ்வுலகமென்றுகழற, மாண்டநற்றவமியற்றரு மறைக் கிழவகேள், வேண்டுபோகநுகர் விஞ்சையர்களமேவுலகமே()

பயன்விழைந்துசிவபூசை புரிவோர்பயிலுவோர்க், கயினுமி வ்னடிலாகை பொருள்யாவுமுதவி, மயல்செய்கின்ற பொரு ணர்சுதலிலாருமகிழ்ந்கூர்ந், தியலிசைப்பனுவனல்குமவ ரிங்கு றைவரால்............................................... ... ......(௰௩)

என்றியம்புகனைநாதருட னேகுநெறியின், மன்றலோதியரம ங்கையர்நெருங்கியிருபால், நின்றுசாமரையிரட்டவொளிர் நீல வரைபோல், வென்றிசேர்தருமன்வந்துளம் வியந்துபுகல்வான்.

ஆரியநான்மறைமுதற் பலகலைக்குமறிவா, லொருவனுயினை யு வப்புறுசெத்தபுரியு, மருவிவல்வினைதுடைத்தனை மகிழ்ச்சியத னாற், பொருவினின்னையெதிர்காணிய புகுந்தனனியான் (௰௫)

என்னநல்முகமனன்பொடு மியம்பிமறைதேர், மன்னருந்த வனை வாழ்த்திவிடைகொண்டுமகிழ்வாற், றுன்னுகாலபடா ருஞ் வரவிளங்குதருமன், றன்னிருப்பதியில்வந்தினிது சாந்தனனே ரோ ... ... ... ... ... (௰௬)

தருமனேகளும்வியந்து சிவசன்மன்மொழிவா, னுருவும்வாய் மையுமுளத்தினையுருக்கவிழைவான், மருவியேகுமிவனே மறலி மற்றிவனேயோ, வெருவும்வெய்யவுருவத்தின னெனப்புகல்வதே

வடிவுமீதலது மற்றுமுளதோவினையன் மாட், டடைவர்யாரி வனகர்க்கணடை யாதகலவர்யார், புடைகொள் சையமினியீது கொல் புகன்றிடுகவென், றடனுரைத்திடுகணங்களொடுநாக்க மொழிவார்................................................ ...........(௰௮)

தருமநீதிபொறையன்பொடு தயாவிவைகளோ, ருருவுகொண் டனையன்மற் றிவனேயொக்குமவர்யா, ரருமறைக்கிழவநின்னிகர ருந்தவர்முனம், பொருவினல்வடிவின் வந்துமுகமன்புகல்வ னால்............................................................(௰௯)

அலகிலாவுயிரடங்கலும் விழுங்குபகுவா, யிலகுவாளெயி றி லங்கவெரிசிந்துமுசல, மலைதிரண்டனபுயங்களில்வயங்கியொளிர, வுலவுகுஞ்சி வடவைக்கனலையொத்தெரியவே...... ... ...(௨௰)

ஆழிவெண்டிரையுயிர்த்தகொலை யாலமுடனே, யூழிவெங்கன லொருங்குகுழல் கண்களுமிழப், பாழிவாயிதழ்துடிப்ப வெடிப டுநெடுவா-னேழுமுட்குமுருமுக்குரலிடித்ததிரவே ...(௨௧)

வெய்யபாதகர்வெருக்கொளு முருக்கொடுநிணத், தொய்யி ல்பூசுகதைசுற்றியெதிர் தோன்றிமறலி, கையில்வாண்மழு வசை த்துலவுகாலபடரைச், செய்யகட்கடையினோக்கி யிவைசெப்பி டுவனால்.................................................. ௨௨)

அன்முகாங்கதை சுழற்றிநெறியற்றவிவர்தமு, செவ்விழுனை கட்டிறித்திட வடித்திடுதிமற், றவ்வண்பாதகரடித் துணைபிடித்த மற்க, மன்னுபாறையிலடித் துடலமாய்த்திடுதியால்............(௨௩)

வெட்டுவாள்கொடுகழுத்தினின்மிதித்துவிழிநையத், தொட்டகழ்ந்திடுதுடிக்கவடிபாசமதனாற்- கட்டியங்கவர்கழுத்தற விறுக்கநிறையிலீ வா-யிட்டனைத்திடுதுமெய்த்தசையையீர்ந்திடுதியால். ()

பிறர்மனைக்குரிய பேதையரிடத்துவிழைவாய்க், குறுகுகாலினைகுறைத்திடுதி கொம்மைமுலைமே, விறுகுறத்தழுவுகையிணையையீர்த்தியவர்மே, லுறுசினத்தினெடுமூசிகணிறுத்திடுதியால்()

வெம்மையோடுபிறர்தம்பழிவிளம்பியுழலுஞ், செம்மையில்லவர்கடையுமிழும்வாயிலயலார், தம்மில்வாழ்பவரைநோக்கினர்தடங்கண்மிசை, யுமமேவாவெனவிரும்புமுளை கொண்டறைதியால்...... ....................................... ... .........(உசா)

மின்னுநக்ககதிர் வேல்விகடபுத்திரமிகப், புன்மையில்லவர்தமைப்பழிபுகன்றவிவனைத், துன்னுமுளைதசை சோரிநிறையாழ்நரகின்வாய்ச், செவ்விகீழுறமடுத்தனல்செறித்திடுதியால்...(உஎ)

போற்றுதம்பொருள்புதைத்துவறியோரின்மெலியா, நாற்றிசைக்கணுநடந்தடிவருந்திநசையா, லேற்றருந்துமவர்கையதனிலெண்ணெயொழியா, தாற்றிருந்தொழுகவாககியெரியூட்டிடுதியால்............. ......................................... ......உஅ)

தருக்குமைம்புல னெறிந்துபொறைசால்குரவனை, மருக்கொள்கொன்றைபுனை வானவன்முதற்கடவுளைச், செருக்கினேடுபழிசெப்புமவர்வாயினிடைசெம், புருக்கிவெந்தழல் கனன்றெழுகவூற்றிடுதியால்..........................................................(உகூ)

விருப்பினோடொருவ னீவதுவிலக்கியிடுவோ, னுணாக்குநாவையறு வேதியரொடும்பர்பொருளை, யுருப்பமாகநுகர்ந்தவர்வயிற்றையகழா, விருப்புமுள்ளொடுமலப்புழுநிறைத்திடுதியால்

உம்பர்வேதியர்விருந்தினரையூட்டிடுநகரார், தம்பசிக்கனறணிப்பநனிதுய்த்தவிவரை, வெம்புகல்லடகருளத்தின்மிகவெம்மைபுரியுங், கும்பிபாகநரகத்திடைகுளிப்பவெறிவாய்... ......(ஙக)

உடல்சினத்தறுக ணுக்கிரமுகத்தவதெளிந், துடைகுநர்க்கிடரிழைத்தவுரை யஞ்சொன்முதிரா, மடநடைப்புதல்வ ராருயிரைவவ்வுமிவரைக், கொடியமாரவுரவத்திடைகுளிப்பவிடுவாய். (ஙஉ)

மருள்செய்கின்றநறவுண்டவரைமண்டுகடல்போற், குருதிவாய்நரகினுய்த்திடுதிகோதிநெறிசே, ரருமறைக்கிழவ ராருயிர்செகுத்தவிவரை, யிருள்செறிந்தநர கத்திடையெறிந்தெறிதியால் ()

மாஇழந்துருபன்னியையடைந்தவிவரைச், சாலநற்பொரு
ள் காரந்துகவர்தன்மையரைவெவுங், காலசூத்திரமெனுங்கொடிய
காய்நரகில்வா,யோவிலிம்படியிழுத்துநனியுய்த்திடுதியால். ( )

ஆயநான்மறையருந்தவர்த மாவிகவருந், தீயபாவமுதனுள்கு
நனிசெய்புமவரோ, டேயிரேணையசி பத்திரமெனப்பெயரவா
ங், காயும்வெந்நரகிலிட்டுடல்களறுத்திடுதியால்... ... ......(௫௫)

சுட்டபொதகளைவெய்யதழ லெண்ணெயிடையே,மாட்டிமற்
றவருடற்றசைகள் போழ்ந்துவளையுந், தோட்டியென்னவொளிர்
துண்டமதனூற்பறவைகள், கூட்டுணுங்கொடிய கோரநரகத்திடு
தியால்.............. .......................... .. ....... ........(௫௭)

தேடருந்துணைவரா ரென்றிருந்திழையினர்,வாடிநொந்துள
ம் வருந்தவதைசெய்தவிவரைக், கூடசன்மலி யெனுங்கொடிய
வெந்நரகிலிட்,டாடன்மாபுயமுவெம் மத்திகையெடுத்தறைதியால்

மாதர்தம்மனையிருட்பவயன் மங்கையர்தமைச்,காதலான்மரு
வுகையிலை பிடிங்கியெறிவெங்,கோதமுற்றுமனை தோறெரிகொ
ளுத்துமிவனை,யேதமெய்தவெரி காலுநரகத்திடுதியால்...(௫௮)

கோளுரைத்துறிதிகொள்பவர் நபிட்புகல்கிலார், மாளநஞ்சு
மீரீவோர்நிறையின்மல்குமளவி, ளுளும்வஞ்சகமிழைத்தவாந
டுக்கமுறவெங்,காளகூடநரகத்தினிடை கட்டியெறிவாய். (௫௯)

இச்சையுற்றருளி னேடிமினிதாடுபுனல்வாய்ப், பிச்சரென்ன
வுமிழ்நீர்மலம் விடுத்தமிலமே,யோரச்சமுற்றமுத ரற்றிநனியாவி
மறுக,மச்சில்வெய்யகொடு பாழ்நரகின்வீழ்த்திடுதியால் (௬௰)

கருவழித்தவர்க டங்களுடலைக்கருவியா, லரிபொருத்துமிறு
மட்டிமிடையிட்டனைநெடுந்,திருகைவாயிடை திரித்துருவமாக்
கியடரா,வெருவருங்கொடிய பாழ்நரகில்விட்டிடுதியால் (௬௧)

அறுசுவைப்பொருள்பகர்ந்துழலுமந்தணர்தமை,நறியகன்ன
லிடுமாலையினருக்கிடுதிதம், முறைதிறம்பவுலகாளுமுடி மன்ன
வர்தமை,வறியகூவலிடை தள்ளுதிமதிந்துயிழவே ......(௬௨)

மருள்கொடுக்குநறை விற்றும்வணிகக்கடனை, விரிவரதத
கைகளெண் புபொடியாகவிரவி, னூரலிலிட்டுயருலக்கையினிடித்
தொழிகலா,நரகிடைப்பதைபதைக்கநனிதண்ணிவிடுவாய் (௬௩)

நெடியகந்தரமறைக்கிழவர்நேமியரசர், படியில்வாழ்வணிகர்
முன்னைப்வெருவாதபழிசுமாந்,தடிகளைட்டியசதுர்த்தனை யதோ
முகமெனுங்கொடியபாழ்நரகிலிட்டுடல்குறைத்திடுதியால். ( )

மற்றொருத்தன்மனையாடனையணைந்தவிவரொக், கற்பிகந்துபிற
ர்போகநுகர் கன்னியர்தமைச்,செற்றுவெங்கனல் கனிந்தொழு
குசெம்புருவநீர்,பற்றிமேவுதுரோனைப்பதைபதைக்கவிடுவார். ( )

பாசபாணிவிடமென்மனையொடு பஞ்சிபொருண்மேலாசை
கூரதனிவிற்றுழலு மந்தணர்தமை, பூசலபோலுயரநாற்றியழல்
பொங்கியுமிழுமாகசேர்கரியசேற்றிலடமடுத்திடுதியால் (௪௬)

ஆரியநோன்பினிதி னாற்றியிடைவிட்டயர்வருந்,திருவில்பாத
கனையீயிறொடுவண்டுசெறியும், நிரயமுட்புகவிடுத்திடுதிநீவிரொ
னதிலம், றூறுசொல்வினொடுபாவிகளனைத்துமாற்றிடுவனால (௪௭)

அன்னபாவிகளைமன்புகறல்கேட்டுளயரா, முன்னர்நாடொறு
மிழைத்தபிழைமுற்றுமுணரா, வெவ்வினைசெய்துமினியென்றுமம
திமாழ்கிவெருவோ,டின்னருங்கொடிய தூதர்முன்னுறப்பதறு
வார்..........................................................(௪௮)

முறைவழாதுலகுமுற்றுமினிதாழிநடவு, மறைகருங்கழலலங்
கல்வடி வேலரசனைப், பொறையினோடவ ளாயெதிர்பருந்து
மகிழ்வான்,மறலிபூசனை புரிந்தடிவழுத்தியிடுமால ... ... ௪௯)

மறைவலோர்கண்முதல னைக்குவருணத்தவர்களு,நெறிவழாது
தம் மொழுக்கநெறிநின்றனர்களோற், றெறுசினத்தபகடேறியணி
செம்பொனணைமே, லுறைதிறொலிறினிது வந்துமுகமன்புகல்வ
னால்..........................................................(௫௰)

வேறு.

தருமசேனன்விடபறுவல் றற்தவக்கிரன்சயத்திரதன், பருநிவ
டிவேற்காந்தமனும்பாசம் திறல்கொள்பராந்தகன்வெங், குருநிவ
டிவாட்டிபதனு வாக்குக்கிரியுமாத்தனல்கிறந்த, வுருவத்தலை
டார்ச்சகத்திரசித்துவனுச்சவன்போருக்கனனே... ... (௫௧)

எறிவேற்றுணைபுரிஞ்சயல்கி ரிரந்திதேவல்பலகலையின், றுறை
போயுயர்ந்தபரமாத்துசுவரூவாவெல்றிவர்முதலாந், திரள்வாள
ரசர்விண்ணுலகிற் சிறந்தகுதர்மைமண்டபத்து, றுறைவார்திருகு
சினமறலி யுறையுநகரிற்செல்லாரே.......................... ௫௨)

நீலகண்டன்மழுவேந்தி நெற்றிக்கண்ணனம்புதேசன், லகா
லன்விடையூர்ந்தோன் கங்கைசூடிகாமாரி, சூலபாணிபுரித்
தோன் மங்கைபாகன்காபாலி, யாலமுண்டோன்மதிசூடி, யத்
காரியீசானன்...................................................(௫௩)

வாசுதேவன்சநார்த்தனன்போர் மதுசூதனனச்சுதனெடுமால், ஈச
னரன்சங்கரன்கிரிச னிறைவன்பிநாகபாணிசிவன், கேசிநாசன்ம
ணிவண்ணன் கெருடத்துவசனரசிங்க, னுசமில்மேலான் விடையூர்
தி நம்பன்மிருத்துஞ்செயன்பாகன்........................(௫௪)

அரவாபரணனழலேந்தியட்டமூர்த்திசெகதீசன், புருடோத்த
மன்கேசவன்கண்ணன் புயங்கசாயிபுள்ளூர்தி. பரமசாந்தன்கண
நாதன் பவன்முக்கண்ணன்சருவேசன், திரிவிக்கிரமன்கமலபதி
தேவன்சவுரிமாதவனே..................................(௫௫)

புராரிதாமோதரன்சயம்பு பூவைவண்ணன்கோபாலன், முரா
ரியனந்தன்கோவிந்தன் முகுந்தன்சார்ங்கபாணியரி, கிரீசனென்
னும்பெயர்முதலாக் கிளக்குநாமநூற்றெட்டும், பாவுமவர்கள்ய
மனுலகம்படாராரழியாப்பதம்பெறுவார்..................(௫௬)

என்றுசிவசன்மாவினுட னினவண்டேதமருவுயிர்க்கு, மன்றற்று
ளவோன்கணநாதர் வகுத்துமொழியுமமையத்துப், பொன்மு
ந்நிதலைப்பொம்மன்முலைப் புரிமெல்கூந்தலரமகளி, ரொன்றிம
கிழ்வோடினிதுறையு முலகமதனைக்கண்ணுற்றான்.........(௫௭)

எட்டாவது சிவசன்மாவை-யியமனெதிர்கொண்ட

அத்தியாயமுற்றும்-ஆ விருத்தம்-௨௯௯.

ஒன்பதாவது

## சிவசன்மாசூரியலோகங்கண்ட

அத்தியாயம்.

கலிவிருத்தம்.

கன்மெகிழ்வோடினிய கண்கவர்வனப்பிற், றென்னடையிதழ்
மாதரிவர் யார்கொலெதிர்தோன்று, மண்டிவளமெய்துலகம் யா
தெனவழங்க, விண்டுகணநாதர்கள்வியந்தினிதுரைப்பார் (௧)

ஈங்கிவர்கள்வேள்விபுரி வோரையிமையோரை, நீங்கரியகாத
லுறநெஞ்சினைபுருக்குந், தீங்குதலைமென்மொழிய தெய்வமடமா
தர், வாங்குநிரைவேலையமு தத்தினெழீஇவந்தார்..........(௨)

பொன்னெழுகிவார்ந்தனைய பொற்புடைநரம்பி, னின்னிசை
யவீணையொடுபாணிநடமுஞ்சொற், பன்னரியதெய்வநவில் பா
டைகலைமாட்சி,மன்னுமதனூல்சுரத விஞ்சையிவர்வல்லார் (௩)

அலம்புசைமனோகரை யுருப்பசியணிப்பூஞ், சிலம்புபுனைசீற
டியுமாவதிதிருந்து,நலந்திகழுமேனகைகலாவதிநடந்தா, விலங்
குகனமஞ்சுளைநிகர்காந்திமதியென்பார்........................(௪)

மணங்கவர்கலாநிதிசு பானனைமழைக்க, ணணங்கதிலகங்கிரு
துசுற்கையழகாருங், கணங்குழையிரண்மதனமோகினிகளிப்பா
ற்,றினம்புதுநலந்தருதிலோத்தமையரம்பை.............. ...(௫)

சந்திரகலைசந்திரவிலேகைதவசுர்க்கை, யைந்துபரிவேள்விபுரி
வோரனையமங்கை, யுய்ந்திடநினைந்துபல வேள்விகளுருற்றும்,
வெந்தழலிலந்தணர்விரும்புமடமாதர்............ ... ......(௬)

இன்னவர்களாதிமட வாரெனையரென்னி, லன்னவர்களாறுபதி
னாயிரவராவார்,மன்னிளைமையோடுயர்வனப்பொருவிலாதா, ரு
ன்னுவிழைவின்படியுருப்பலவெடுப்பார்......... .........(௭)

இங்கிவர்களன்றியுய ரேழ்கடல்வரைப்பின்,மங்கையர்கண்மா
தவுபவாசம்விடுபோதி,னங்கணுதனெஞ்சமறி யாதுதவமுற்றார்
கொங்குகமழ்விண்ணிலுறை சுத்தியர்களாவார்...............(௮)

தீதில்மணமன்பொடு பொருந்துதல்செய்யாம, லேதிலவொ
ருத்தன்வலிதிற்புணரினேங்கிக், காதலனைநெஞ்சுற நினைந்துருகு
கற்பின்,மாதர்களுமிவ்வுலகம் வைகிடுவரன்றே ........ ...(௯)

தூயமறையோனொடு விரும்புமொருதோகை, யேயகலவிக்கி
னிதி யைந்தவைகொடுத்தோ,ராயபலன்வேட்டிய ருந்தவமுய
ன்றோர்,மீயுயருமிவ்வுலக மேவுவர்களன்றே......... ..... (௰)

கன்னியையொருத்தனுறு காதலொடுசேரி, லன்னவளுமன்று
முதலாகநனிவாட, மன்னிவிரதத்தொடும் வருந்தியுறைவாளேற்
றன்னிகரில்பொற்பினொடு மிவ்வுலகுசார்வாள்... ...... ...(௰௧)

என்றுகணநாதர்க ளியம்பலவைகேளா, நின்றினிதுசென்னெ
றியினீதிமறைவல்லோன்,மன்றல்கமழ்செங்கமல வாண்முகமல
ர்ந்தந், துன்றுகதிரோன்மருவு தொல்லுலகுகண்டான்...(௰௨)

மின்பொருவுசெங்கதிர் விரிந்திருள்விழுங்கும், பொன்பிறழு
மோருருளி னேழ்புரவிபூண்ட, மன்பெரியதேரிலுறை வானவ
னைநோக்கி-யன்பொடுவணங்கவருள் செய்தனனகன்றான் (௰௩)

ஆதவனகன்றிடலு மந்தணருரைப்பான் - யாதுதவமாற்றினர் களிவ்வுலகுசேர்வார் - போதவபுரிதேவிநிலையென்புகறிசொன்னக் காதலொடுவினவுகணநாதாகவுரைப்பார்......... ... ...(௰௪)

பூதமெலையுந்தனிபுரந்திடுவன்யாவ; னேதமறமுத்தொழி லியற்றிடுவன்யாவன் - வேதவடிவாய்த்தனி விளங்குமவன்யாவன் - மாதவவவன்கொலிவனென்னமறைகூறும்.................(௰௫)

இன்னகதிர்வானவனை யானெனமதித்துப் - பொன்னடிபணிந்திலிதுபூசனைபுரிந்தோர் - மன்னவர்களிப்பதம் வழுத்தல்புரியாதோர் - துன்னவரிதாகுமிருளோங்குலகுசேர்வார்...... ......(௰௬)

கலிவிருத்தம்.

கதியளித்திடுங்காயத்திரியினை - யுதயகாலையினுச்சியின்மாலையில் - விதியினோதல்விடுத்துறைகின்றவா - பதிதராகுவரோழுபகவினே.................................... ... .........(௰௭)

எழுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

பொருவறுகாயத்திரியினையிதயம் பொருந்திடுமளவுநின்றுரைத்து - மருவுநண்பகலிற்பரிதியைநோக்கி நவின்றுபுன்மாலையம்பொழுதில் விரிகதிருடுக்கடோன்றிடுகாறும்விழைவொடுமௌனமாயிருந்து - திரிதருபுலன்களடக்கினர்செபிக்கிற் செங்கதிருலகிடைச்சேர்வார் ... ... ... ... (௰௮)

மைந்துடைமைந்தேகாசுரர்த்தெறுவான் மாலையுங்காலையும்பகலு. மந்தணருதவுமருக்கியப்புனலை யாதவனினிதுவந்தருள்வான் - முந்துறுசீர்க்காயத்திரியினுற்காலை மும்முறையருக்கியம்புரிதனந்தலில்சிறப்பாருலகமோர்மூன்றுந் தானமாய்நல்குதல்பொருவும் ... ... ... ... ... (௰௯)

அறிவருங்காயத்திரிதனக்கிணையாயமறைவதொன்றில்லையாங்கதுபோ - னிறைபுனல்வளங்கூர்காசியப்பதிக்கு நிகர்தருபதியுமாங்குறையு - மிறைவனைநிகர்க்குங்கடவுளுமில்லையா லியம்புகாயத்திரியெழுதா - மறையொடுங்கமலமலரினுன்முகற்கு மேற்றதாயெனவகுத்துரைப்பார் ... ... ... ... (உ௰)

தெரிவருந்தவத்துக்கோசிகன்காயத்திரிதனைச்செபித்ததாலன்றோ - வருமறைப்பிரமவிருடியாய்ப்படைக்கு மருந்தொழிற்கொருவனுயமர்ந்தான் - பரவுநான்மறையுமறுவகைநூலும் பயின்றுளாரந்தணரெல்லம் - பொருவில்சீர்க்காயத்திரிதனை விதியிற்புக [illegible] ... ... ... (உ௧)

கருதருஞ்சுடருமலரினான்முகனுங்கருங்கடல்வண்ணனுமறையுந்- தெரிதருகாயத்திரியெனப்புகல்வர் மறைகளுமங்ஙனஞ்செப்பும் - பரிசினாற்காயத்திரிக்குமொள்ளொளிய பரிதிவானவற்குமெஞ்ஞான்று-மொருவிலாவாச்சியவாசக பாவசம்பந்தமுண்டெனவுரைப்பார் ... ... ... (௨௨)

சிறந்தபல்லுயிர்க்கு மெண்பெருந்திசைக்கும் வியாபியாஞ்செங்கதிர்ச்செல்வன்- பிறந்ததும்பிறவாநிற்பதும்பிறக்கப்படுவதும்பேசிலாங்கவனே- யறிந்துயர்காயத்திரிதனையோதி யலர்கதிர்ச்செல்வனையன்பா - னறந்துணர்தூவிக்கைதொழுமவரோ ரன்னுமிப்பதியில்வீற்றிருப்பார் ... ... (௨௩)

அருக்கபூசத்திலருக்கமூலத்தி லருக்கவத்தத்திலுத்திரத்திற்-றிருக்கிளரருக்கவாரமென்பதனிற் செழுஞ்சுடர்ப்பரிதிவானவனைக்-கருத்துறநினைத்துமெய்ம்மயிர்ப்பொடிப்பக் கைதொழுதிருகணீர்வார, மருக்கிளர்மலர்தூயிறைஞ்சுவர்தமது மனத்தினில்விழைந்ததுபெறுவார் ... ... ... (௨௪)

பூசமார்தத்திலருக்கவாரத்திற் புலரியினீரிடைப்படிந்து- மாசறுதானமோமநற்செபங்கண்மனமகிழ்சிறப்பவாங்கியற்றிப்-பேசருங்காமக்குரோதம்விட்டருளாற் பிறங்குசெங்கிரணவற்றொழுவோ-ரேசவில்வனப்பிலரம்பையர்மருவ விரவிநல்பதத்தில்வீற்றிருப்பார் ... ... ... ... (௨௫)

மருவியவயனத் தருமறைகூறு மந்திரம்புகன்றுதென் புலத்தோர்க் - குரியநற்கடன்கள்கழித்துளோர்நறுநெய் புடன்றிலவோமங்கள்புரிந்தோர்-பரிவொடுகடவுட் பராயினோர்விளங்குபரிதிபோன்றிலங்குருவெடுத்துப்-பெருகுநோய்துன்ப மூப்பிவையொழிந்து பிறங்குமிப்பதத்தினிலுறைவார்...... ...(௨௬)

மேயநல்லயனத் தெறிபுனல்படிந்து வேதியர்க்கரும்பொருள்வழங்கார்-வாயில்நடோறுமில்லெனவிரந்து மறுகுவர்வாளையிற்றரவஞ்,சேயொளிவிரிக்கும்பரிதியைத்தீண்டு காலையிற்றிலத்தொடும்பொருளைப் - பாய்புனற்குருக்கேத்திரந்தனிற்றானம் பண்ணினரிப்பதம்பெறுவார் ... ... (௨௭)

இரவியையராத்தீண் டெல்லையிலெறிநீர்யாவையுங்கங்கையைநிகர்க்கு, மருமலராங்கிழவரியாருநாலிமுகனைப்பொருவுவரரும்பொருளையும்விரிசுடர்ப்பைம்பொன் போதுமவ்வேலையிற்குநீராடுதலேமம்-புரிதனற்றானம் வழங்குதலிரவிபதத்தினிற்பொருந்துகாரணமாம் ... ... ... (௨௮)

ஆயிரங்கதிரோனெனும்பெயர்முதலா வலர்கதிர்ப்பரிதியிரு
கத்-தூயநான்மறையுமியம்பியவெழுபா னாமமும்விதிமுறையறை
ந்து - மேயபேரன்பாற் செழுமலர்தூவி விரைமலர்ச்சேவடி
தொழுவார்-பாயிருள்பரிதியுலகெலாம்விளங்கும் பகலவன்பதத்
தில்வீற்றிருப்பார் ... ... ... (௨௯)

செம்பின்வள்ளத்திற் றண்புனனிறைத்துச் செய்யசாந்தறுகு
வெள்ளரிசி-வம்பவிழலரிப்போதுதூய் முழந்தாண்மண்ணிடை
யூன்றிமுன்னுரைத்த-வைப்பதோடிருபானாமமுமோதி யாங்கது
சென்னிமட்டேந்தித்- தம்பொறியடக்கியருக்கியங்கொடுப்போ
ர் தயங்குமிப்பதத்தினிற்சார்வார் ... ... (௩௰)

மன்னுபேரொளிகட் குறையுளாம்பரிதி வானவன்பெருமை
யையாரே-யின்னதென்றெடுத்துமொழிகுவரொய்மா வியன்றன
மொழிந்தனனென்றத்-தன்னமர்கணங்கண் மொழிதல்கேட்டன்
னோர் தம்மொழிவிழைவிருங்ககன்று - சென்னெறியதனிற்புரந்
தரனுறையுமுலகுகண்டுளமகிழ்சிறந்தான் ... ...(௩௧)

ஒன்பதாவது-சிவசன்மா-சூரியலோகங்கண்ட அத்தியாயமுற்றும்

௮-விருத்தம்-௩௧.

---

பத்தாவது

# சிவசன்மா தெய்வலோகங்கண்ட

## அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

காண்டலோடும்விழிகள்களிப்புற - வீண்டுதோன்றுமுலகமி
யாதென-மாண்டநற்றவன்கேட்டிடவான்றொட-நீண்டமாயன்க
ணங்கணிகழ்த்துமால்... ... ... ... ...(௧)

கனைத்துவண்டு சுரும்புகளூதிய-தனைப்பொலந்தருநண்ணிவ்
வுலகினை- நினைப்பருந்தவப்பேற்றினிலைபெற - மனத்தினால்வகு
த்தான்மயனென்பவே ... ... ... ... (௨)

மன்பெருந்தருமாணிழைநல்கலாற் - பொன்செய்கொல்லரு மில்லைப்புரியவா-யன்பிற்றுய்ப்பனவானினநல்கலா,-லின்பவுண் டியபிறருமில்லையால் ... ... ... ... (௩)

அண்ணல்யானையடலயிராவத - மண்ணுறுசெய்யமணிகள் சிந் தாமணி- யுண்ணுமுண்டியமிர்தமுயர்பொழில்-கண்ணகன்சிலை க்கற்பகச்சோலையே ... ... ... ... (௪)

வாமமேகலையாராமங்கையர் - தாமவீதிகள்யாவுந்தமனியஞ் சேமநற்குடி யாவையுந்தேவர்கள்- காமதேனுக் கறவைகளென் பவே ... ... ... ... ... ... (௫)

கருமணித்தொகைநள்ளிருள்காட்டலும்- விரியசெம்பொனிளை வெயில்வீசலு - மருவலன்றிவளங் கெழுமாநகர்க்- கிரவுமில்லை ப்பகலுமிங்கில்லையால் ... ... ... ... (௬)

திருவநீணகர்காக்குந்திறலினோன் - மருவுமேழ்திசைப்பாலர் மணிமுடி-பொருதுசேந்து வெயிற்கதிர்பூத்தொளி-ரெரிமணிக் கழலிந்திரனென்பவே... ... ... ... ...(௭)

புரவிமாமகநூறுபுரிந்துளோர்க்- கருநெடுங்கட்புலோமிசை கண்கவர்- வருமுலைத்தடம்புல்லியமாநகர்க்-கரசனுகவினிதிரு ந்தாள்வரால் ... ... ... ... ... (௮)

ஆன்றவேதமறைதருமுப்பத்து - மூன்றுகோடியமரர்முறை முறை - சான்றகேள்விச்சதமகன்பூங்கழல் - வான்றணைப்பதம் போற்றிவணங்குவார் ... ... ... ... (௯)

வெருவலின்றிமருமத்துவேனுழைந்- துருவனாட்பினுயிர்வி டமன்னவ-ருருமகம்புரிவிப்பவரற்றநு- ரெரிசெய்பொலங்கிலத் திந்நகரெய்துவார் ... ... ... ... . (௰)

துலங்குசெம்பொற்றுலைபுகுமன்னவ- ரலங்குளைப்பரிநன்மக மாற்றுந-ரிலங்குபைம்பொனளப்பிலவீந்துளோர் -நலங்கொளி வ்வுலகத்திடைநண்ணுவார் ... ... (௰௧)

தவமிழைத்துந்தனிமகமாற்றியும்-புவிகளேழும்புரந்திடும்வே ந்தரு-மவுணசித்தரரக்கரியக்கர்மற்- றெவருமிந்நகரெய்தவிரும் புவார் ... ... ... ... ...(௰௨)

எனவிளம்புதல் கேட்டியன்மாதவன் - றனைவிலேலகுநெறியி னோர்தொன்னகர்- முனம்விளங்கியதியாதுமொழிகென-வின்னவ னுங்கணநாதர்விளம்புவார் ... ... ... (௰௩)

ஈதுபூவுகலோகமெரிபுகு - மாதர்வேள்விகளாற்று மறைய
வர் - சீதந்தீர்ப்பனநல்குந்திறத்திறே - ராதரத்திவ்வுலகி லுடை
வரால் ... ... ... ... ... ... (௰௪)

விண்ணுளோருமிவனுகர்மிச்சிலே- யுண்ணவேண்டுவரொண்
பிறைக்கண்ணியன் - கண்ணுமீங்கிவனின்னகடவுளை - யென்னு
ருதவர்பாழ்நரகெய்துவார் ... ... ... (௰௫)

இந்தவெந்தழற்செல்வனுக்கின்றரு - டந்தையாரெத்தவமுய
ன்றிப்பதம்-வந்தடைந்தனன் கூறுமின் மற்றெனை- வந்தனுளனுக்
காங்கவர்கூறுவார் ... ... ... ... (௰௬)

கொல்லைறவேணிக்குழகனுக்கலப்பினன் - மன்றநற்றவமாற்றி
வரும்புலன்-வென்றும்நோற்றபுகழ்விசுவானர - னென்றுளாரெ
திருமிறப்பாளரோ ... ... ... ... (௰௭)

பெருமைசான்றபிரமசரியத்தின்-மருவுநாளின்மறைபயிலந்த
ண-ரிருதிறத்தறுமாச்சிரமங்களி-னுரியதியாதெனவுள்ளத்திலெ
ண்ணன்றெய் ... ... ... ... ... (௰௮)

இறந்துளோர்க்குமிரவலர்க்குந்தனி- துறந்துளோர்கட்குந்து
ப்புரவீதலா - லறந்தவாத்துயரில்லறமாற்றுதல்-சிறந்ததென்ன
விவிதுளந்தேறினன் ... ... ... ... (௰௯)

ஏசலன்றியியம்பியநாள்களின்- மாசில்கற்பின்மனையவட்சேர்
ந்திடிற்-பேசுகின்றபிரமசரியமென்- றுசில்வேதங்களியாவுமொ
ழியுமால் ... ... ... ... ... (௨௰)

இல்லறத்தினிலைசந்துங்கிளையொடும் - புல்லிப்பாத்துணனீத்
தவர்பூந்திரா-மல்குநீர்படியாதவர் மான்பொரு- ளைல்கிடாரிவ
ரோநரகெய்துவார் ... ... ... ... (௨௧)

அரியபூம்புனலாடியநான்முதன்-மருவுபன்னிருநாளுமணந்
திட-லொருவனிற்பிழையாமலொழுகுதற் - பெருமைசான்றபிர
மச்சரியமே ... ... ... ...(௨௨)

தனதில்லாளொடுமுத்தழல்வேள்விசெய்- தினிதினல்லறமாற்
றியிருப்பவோன்-மனைவியோடும்வனத்திடைவைகிய - புனிதர்த
ட்பிற்புகழினனுவனால் ... ... ... ... (௨௩)

புல்லுகானிற்பொருந்தியில்வாழ்க்கையின்- மல்குசெல்வமன
த்திடையெண்ணிறே-னில்லறத்திலிருந்தாதவஞ்செய்வோ-னல்
லவ்வானப்பிரத்தனுமல்லனால் ... ... ... (௨௪)

பெற்றவைக்கொண்டருந்திட்பெறுதனை - மற்றியாவுமனைத்தின் விழைந்திடா - நற்றிறம்பிலராகியிருக்குநர் - முற்றுநீத்தவர்தம்முனர் ... ... ... ... ... (௨௫)

அனைத்துநீத்தவராகியுமொன்றினை - மனத்தினால்விடநீத்தோர் மனைவாழ்குன - ரினைத்துறவளித்தாலுமற்றின்புறார், நினைப்பருந்தவநீத்தபுனிதரோ ... ... ... (௨௬)

இல்லறத்தினுயர்ந்ததொன்றில்லெனத் - தொல்லைநான்மறையாளன்றுணிவுறா - முல்லைமூரன்முகின்முலைக்கொவ்வைவாய் - வல்லிதன்னைமணம்புணர்ந்தானரோ ... ... (௨௭)

மனையறந்திறம்பாதுமறையவன் - புனைசெய்மேகலையோடும் பொருந்துநாட் - கனையிருட்குழற்கற்புடைக்காதலி - புனைவகேட்டியெனமொழிந்தாளரோ ... ... ... (௨௮)

அடிகணின்னருளெய்தியடியனே - னொடிவிற்செல்வ மூலப் பிலபெற்றனன் - வடவரைச்சிலையானன்னைமைந்தனைக் - கடிந்னல்கெனக்கைதொழுதேத்தினாள் ... ... ... (௨௯)

அரனையன்னமகவையளித்தியென் - றுருவமேகலையாள்புகன்றது - கருதியின்னவள்சொல்லலுமு கண்ணுறுதற் - றிருவுளச்செயலாமென்றுதேறினான் ... ... ... ... (௩௰)

மையகண்ணிமகவளிப்பேறுணக் - கையமெய்தலென்றுற்றியருந்தவஞ் - செய்யவெள்ளணித்திரைபொருகங்கைசூழ் - பொய்யில்காசியிற்போயடைந்தானரோ ... ... ... (௩௧)

மாசிலாதமணிகன்னிகைப்புன - லாசில்வேதியனாடிமுத்தாபமுந் தேசினீக்கித்திருவளர்காசிவா - ழீசர்யாரையுமேத்தியிறைஞ்சினான் ... ... ... ... ... ... (௩௨)

உடைதிரைப்புனற்றீர்த்தங்களொன்றற - வடைவினாடியருமறைவேதியன் - மிடையுமீசரில்யாவர்விழைந்தன - கடிதினல்குவரொன்றுகருதினான் ... ... ... ... ... (௩௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காசிநகரினிறைறையுமோங்கார விலிங்கமுதற்கருணைகூ ...*
மாசறுமிக்கிரர்வருணைவிலிங்க மீறுகவருமறைகளுன்கும்...*
பேசுபுகழிலிங்கத்தில் விரோசனன்றிமகப்பேறுதல்கு - மீசனொரு
வொன்றினையாவுளமுருகிவிழிபனி [illegible] விறைஞ்சினான் ... (௩௪)

அத்தலையில்விச்வேசன்றிருமுன்னரமர்சத்திபீடந்தன்னில் - வி
த்தகஞ்சேர்பிரகடையொடு விகடையெனுமணங்குறையுமதனி
ன்பாங்கர் - சித்திவிநாயகனுறையு மிங்கிவரை யெஞ்ஞான்றுஞ்
சிந்தைசெய்வோர் - முத்தியினிதடைவரென முனிக்குறைந்த
மாதவத்தோர்மொழிந்தாரன்றே ... ... ...(௫௫)

பஞ்சசுரனேழ்புவியும்புரக்கும்வசு பூரணனும்பழிப்பில்வே
ந்த - னஞ்சலிசெய்தருள்கொழிக்கும்விச்வேச னடியிணையிலடை
ந்தார்செய்ய - கஞ்சமுகைகவற்றுமுலைக் கோகிலாவரம்பையெ
னுங்கனிவாய்த்தீஞ்சொல் - வஞ்சியரமகளாடல்புரிந்த வன்றன்
சேவடியின்மருவினளே ... ... .... ...(௫௬)

விரிகதிர்சூழ்பிறைமௌலி வேள்விபுரிதருபாரத்துவாசன்மிக்க
வருமறைசேர்வேதசிரசெனுந் தவத்துமறைமுனிவனலபினோ
டும் - பொருவிலுருத்திரசமகம்விதிமுறையினோதி நறும்புனலெ
ளுட்டி - யுருவினொடும்விச்வேசன்றிருவுருவி னொன்றாகவுறைதல்
செய்தார் ... ... ... ... ... (௫௭)

கின்னரமாதொருத்திதனதுயிர்க்குயிராயினிதுறையுங்கேள்வ
னோடு - மின்னிசையாழ்பயின்றீசன் சரணடைந்தாளெழிற்சங்
கசூடனென்னும் - பன்னகவேந்தொளிகெழுதன்பணமணி நீரா
ஞ்சனஞ்செய்பரிசுதன்னாற்-றுன்னரிதாயணித்தாகும்பேரின்பக்
கடல்படிந்துதிளைந்தானன்றே ... ... ...(௫௮)

சிலைத்தடந்தோட்சயித்திரதன்விச்வேசன் சேவடியிற்சிந்தை
சேர்த்தி - நிலக்கிழமையனைத்துமுனமெய்தினான் விரதனுநிகரில்
வேந்து - மிலக்கமில்சீர்வசுதத்தனெனும்வணிகர்க்கிறைவனுமி
வ்விறைவன்செய்ய - மலர்க்கமலத்தாள்வணங்கிவானவரும் பெ
றலரியமகப்பெற்றானால் ... ... ... ...(௫௯)

அருளினிவ்விச்வேசனடிபோற்றி யருமகப்பேறடைவனென்று
வேதமறுமதிக்கூவப் புனலாடியைம்புலனுமிகலைநூறிக் .. ...*
காதலெனுங்காமமுதன்முக்குறும்பு மெறிந்துளத்தாக்கவலைநீங்கி
வேதமுறைதெரிந்தருளும் விச்சுவானரனரியவிரதம்பூண்டான்

ஓர்திங்களோர்பகலுண்டோர்திங்களிரவருந்தியோருவாநல்கி
னோர்திங்க ளயின்றுமற்றை யோர்திங்களெவ்வுணவு மொழித்து
நீம்பா - லோர்திங்கள்குடித்தடைக்கா யோர்திங்களருந்தியெ
ள்ளி னுருநுண்பிண்டி - யோர்திங்களுகர்ந்துபின்ன ரோர்திங்
கள்பரிவினொடு முறுநீர்மாந்தி ... ... ... (௬௧)

ஓர்திங்களாறுதவுமைந்தினையும் புனிதமாயுவந்துமாந்தி ...* யோர்திங்கள் சாந்திராயணம் புரிந்து தருப்பைநுனியொழுகு தெண்ணீ, ரோர்திங்கள்பருகிமற்றை யோர்திங்கள்வளியருந்தியுடலம்வாட்டிப், பாரெங்குமதிசயிப்பப் பன்னிருதிங்களுந்தவத்திற்பயின்றானன்றே ... ... ... (௪௨)

திங்களொருபன்னிரண்டுங் கழிப்பின்மற்றைத் திங்கடனிற்றிரைகுலாய, கங்கைநறும்புனலாடிவீரேசனடிபரவுங்கருத்தினோடு, மங்குலுறுமவ்விலிங்கத்தாண்டிருநான்கமைந்துவளர்செவ்வியோடுந், துங்கநெடுஞ்சடாமௌலித் தாபதன்போலோருருவுதோன்றக்கண்டான் ... ... ... ... (௪௩)

வெண்ணீறுபுனைவடிவு மருமறைகள் மழலையுறமிழற்றுவாயுமுண்ணீர்மை திரிந்துருகக்காதளவு மோடியரு ளொழுகுகண்ணுந்,தெண்ணீர்முத்தென வொளிருங்குறுநகையுஞ்சிறுசதங்கைச்சிலம்புந்தாளுநங்,கண்ணீர்நுண்டுளிசோரமயிர் பொடிப்பவிதயமலர்களிப்பக்கண்டான் ... ... ... (௪௪)

அருவுருவாயேகமாய்க்குணங்குறிக ளெவையுமின்றியசலமாகி, நிருமலமாயெவ்வுயிர்க்குமுயிராகிச் சுடரொளியாய்நித்தமாகிக், கருதரியவானந்தக்கடலாகி மெய்ஞ்ஞானக்கனியாய்நின்ற, வரதநினதடிக்கமல மனத்திருத்திக் கொழுமலர்தூய் வழுத்தல்செய்வாம் ... ... ... ... ... (௪௫)

இலகொளியகதிரொன்றாயிரம்புனல் பெய்குடங்கடொறுமியைந்துநானு, மலகில்பலவுருவாகித்தோன்றுதல்போற் சராசரங்களனைத்துமாகி, யுலகமுழுவதற்குமொருதனிக்கடவுளாகி யுலகளந்தமாலு; மலரயனுமறியாதுநின்றநின்றன்சேவடிகள் வணங்குவாமே ... ... ... ... ... (௪௬)

கானலிடைத்தெண்ணீருங்கயிற்றிலில் வாளரவுமலை கடலிற்பட்ட, கூன்முதுகிப்பியிற்றோன்றுவெள்ளியு மம்முதலுண்மைகுறிக்கிற்றீரு, மானவைபோலினையறியிற் றோன்றுசகமனைத்துநில்லாதழியுமாற்றாற், றேனவிழ்பூங்கமிக்கையணிசெல்வநின தறைகழற்றாள்சென்னிசேர்ப்பாம் ... ... (௪௭)

நீரினிடைத்தண்மையுஞ்செந்நெருப்பினிடைவெம்மையும்வெண்ணிலவுத்திங்கள், சேர்தருதட்பமுமிலகுசெஞ்ஞாயிற்றழற்சியுந்தீம்பாலினெய்யு, மீர்மலரினறுமணமு மென்னலாயுலக

மெலாமிருக்குமெந்தை, வார்கழற்சேவடிக்கமலநறவொழுகும லர்தூவிவணங்கல்செய்வாம் ... ... ... (௪௮)

நோக்கின்றிகண்டுநனிகையின்றிக்கொடுத்துமறை நுவல்வதா ய, நாக்கின்றியறுசுவையுமினிதுணர்ந்துங்காலின்றிநடத்தல்செ ய்து, மூக்கின்றிமணங்கவர்ந்துஞ் செவியின்றிக்கேட்டுமறை மு தல்வரியார்க்கும்,வாக்கன்றிமனத்தினுக்குமெட்டா நின்றாமரை த்தாள்வணங்கல்செய்வாம் ... ... ... (௪௯)

வண்டுழாய்ப்பசுந்தெரியன்மாயவனு நான்முகனும்வானு ளோரும்,மண்டர்நாயகனுமறைமுனிவர்களுமறிவரிதாயன்புமுற் றும், தொண்டரானவர்க்கெளிதாய்த் தோன்றுதனிச்சுடர்க்கொ ழுந்தேசுருதியென்னும்,பண்டைநூன்முடிவிலுறைபராபரனின் னடிக்கமலம்பணிதல்செய்வாம் ... ... ...(௫௰)

குலங்குடிகோத்திரமின்றிப்பிறப்பிறப்பும் பெயர்வண்ணங் குணமுமின்றி, யிலங்கொளியவெறுவெளியாயிருந்துநெடு நீரு லகம்யாவும்வேட்ட,நலங்கொள்பொருளனைத்தினையு நல்குதலா னளிர்மதிச்செஞ் சடையோய்மற்றுன், பொலன்கழற்றாமரைம லரொன்புன்றலையின்மிசைசூட்டிப்போற்றுவேனால் ... ...(௫௧)

முதியவனீ காளையுநீ முதுக்குறவில் பாலனுநீ முளரிவாட் டு, மதிபுரையும்வாண்முகத்து மலைமடந்தை கொழுநனுநீ வா னோர்போற்றுங், கதமெழரிகான்மழுவிலைவேற் கங்காளநாதனுநீ யாதலானின்,பொதியவிழ்தாமரையனையபூங்கழல்க ளெஞ்ஞான் றும்போற்றல்செய்வாம் ... ... ... ...(௫௨)

என்றினைய துதிகூறியிறைஞ்சுதலுமாங்கவனை யெழுகவென்று நன்றுதுதிமகிழ்ந்தனனீவிழைந்தன நல்குவன்விளம்புதியெ ன்ன, மன்றவுயிர்க்குயிராயவரதநினக்கறிவரிதாய்மற்றொன்றுண் டோ, புன்றொழிலேன்றனைக்கேட்டதென்னை யெனமறைமுதல் வன்புகல்வன்மாதோ ... ... ... ... (௫௩)

மின்போலுநுடங்கிடைநின்மனைக்கிழத்தியவள் வயிற்றின்வி ண்ணோர்போற்ற, வென்போலுமொருபுதல்வன்கிரகபதியெனு ம்பெயரினியைவனன்ப, ருன்போல்யாரித்துதிப்பேருவகைபுரி யட்டகமீதுலகினோர், மன்போடுந் துதித்திறைஞ்சில் வந்திய ரு மருமகட்பேறடைவர்மாதோ ... ... ...(௫௪)

என்னமொழிந்தருந்தவத்தோன்வேட்ட வரமுவந்தருளியிலி
ங்கநாப்பண், முன்னியிறை மறைந்திடலுஞ்சூழ்புலன் வென்
றிருவினையுந்தொலைத்துநீங்கா, மலினியவாணவமுதலமலமூன்றி
ன்வேரகழ்ந்தமறைவலாளன், றன்னமர்காதலியுறையுமனையகத்
தின்மகிழ்விறொடுஞ்சார்ந்தானன்றே ... ... (௫௫)

௰ - வது. தெய்வலோகங்கண்ட அத்தியாயமுற்றும்

ஆக-அத்தியாயம் ௰-இ-விருத்தம்-௱௮௫.



பதினொன்றாவது

## சிவசன்மா அக்கினிலோகங்கண்ட

அத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

தொழுதகுதவத்தின்மிக்கந்தொன்மறையந்தணாளன், விழைவொ
டுமறங்களாற்றி மேதகவொழுகுநாளி, லெழில்கனிந்தொழுகச்
செம்மாந் தெழுமுலையறமென்கூந்தற், கழைபுறந் தோளினாட்
குக் கருப்பம்வந்துற்றதன்றே ... ... ... ...(௧)

அலர்முலையம்மெல்லோதி யரிமதர்நெடுங்கட்செவ்வாய் *
விலகிவில் லுமிழும்பூணாள் வியாழகேந் திரத்திற்றூய, நலனுறு
மோரைதன்னி லுண்மலர்மாரிசிந்த, வுலகெலா முவகைபொங்
கவருமக வுயிர்த்தாளன்றே ... ... ... (௨)

பொன்மழைபொழிந்தவானம்பூநறுஞ்சுண்ணஞ்சிந்தித், தெ
ன்வரையுயிர்த்த தென்றற்றிசை தொறுந்தவழ்ந்தொல்கி, மின்
னுறழ்மருங்குநோவ விஞ்சையர்மகளிராடக், கின்னரமிதுனமி
யாவுங்கிளைநரம்புளர்ந்தவன்றே ... ... (௩)

அத்திரிமரீசிகார்க்கனங் கிராவசிட்டன்சனன்று, முத்தழல்வே
ள்வியாற்று முற்கலன்சிலாதன்சங்க, னுத்துங்கன்வியாதன்வாக்
ச னுரோமசன்பரத்துவாசன், மெய்த்தவமதங்கன்தக்கன் விபா
ண்டகன்மிருகசிங்கன் ... ... ... ... ...(௪)

காசிபன்சாதுகன்னன் காவலனுபத்தம்பன், கோசிகன்சிதன்
பாக்கன்குர்ச்சன்றேவலனுரீதன், மாசில்கண்ணுவன் மார்க்கண்
டன் வான்மீகன்சாலங்காய, னசறுபிருகுவெச்சுசொ லகத்தியன்
வாமதேவன் ... ... ... ... (௫)

நாரதனாதியாய நான்மறைமுனிவர்விண்ணோர், கார்நிறச்செ
ங்கண்மாயன் கலைமகள்கொழுநனந்தி, போருடைக்குலிசவே
ந்தன்பொன்புகருரகவேந்தர், சீர்கெழுமறைவலாள னில்வயிற்
சேர்ந்தாரன்றே ... ... ... (௬)

உரவுநீர்க்கடல்களேழுமொலிகெழுகடவுளாறு, மருவியஞ்சார
ற்குன்றுமலர்சினைத்தருக்களியாவு, மருவுதம்முருவமாற்றிமானி
டவுருவுதாங்கி, யெரியழற் கடவுடோன்று மில்வயிற் போந்த
மாதோ ... ... ... ... (௭)

விதிமுறைசாதகன்மம் வேதியன்சிறுவற்காற்றிப், பதினொன்
றுநாளினில்வின்பதியெனப்பேருஞ்சாத்தி,மதுமடைதிறந்துபா
யும்வண்பிழாய்முருந்தணோடுந், ததைமலர்க்கமலப்புத்தேடன்ன
கர்க்கேகினானே ... ... ... (௮)

தேசினிலுருவிலீசனனையவிச்சிறுவற்பெற்ற, மாசறுகடவுட்க
ற்பின் மடந்தையைமறைவலானை, யாகிகள்கூறியீசனன்பினர்க்க
ரியனாண்டே,பேசிலென்றியாருந்தத்தம் பெரும்பதியடைந்தா
ர்மன்றோ.......................................................(௯)

சிறுவனுங்குழையுநாளிற் றிங்களோர் நான்கிற்செய்ய,மறுகி
டைமிதிப்பித்தாருமதிதனி னலவாய்செய்யா,வறையுமோராண்
டில்வாய்ந்த மயிர்வினைமுடித்தாண்டைந்தில், முறையின்முப்
புரிநூலிட்டு முதுமறைபயிற்றுவித்தார்... ... ... (௰)

அறிவுடைக்குரவன்சான்றாய் விஞ்சைகளனைத்துமுற்றி,மறை
யினுக்கொருவனென்ன வான்புகழுலகம்போர்ப்ப, வுறைதரு
நாளிற்றெய்வமக[illegible]யாழிசையினோங்கு,நறைமலர்ப்புத்தேளீன்ற
நாரதமுனிவன்போந்தான்... ... ... ... (௰௧)

ஆயும்யாழ்முனியைப்போற்றி யளவளாய்முகமன்கூறி,மேய
நல்விருக்கைநல்கும் விச்சுவா நரனைநோக்கி, மாயிருஞாலம்
போற்று மகவினைப்பயந்தாய்நின்போ, லேயினரியாரோசிரத்தி
முகப்பெறார்க்கின்பமியாதே ... ... ... (௰௨

தந்தைதாய்பணித்தல்செய்யுந் தவமலாற்றவம்வேறில்லை,மைந்தருக்கெறிகளேனும் வணங்குவர்தாயைத்தந்தை, யந்தமைந்தனையேபோற்றல் வேண்டுமெற்றுதறன்னாற், சிந்தையுற்றுணரிற்றாயே தந்தையிற்சிறந்தாண்மன்றே... ... ... (௰௩)

எத்திருவுடையரேனு மின்கனிமழலைச்செவ்வாய்ப், புத்திரனிலாதோரொன்றும் பொறியிலராயவாற்றான்,மெய்த்தவப்புரிந்தாமைந்தர்ப் பெறுவதேவிழைவர்யாரு, மூய்த்தநன்மகவுமோரேழ்பான்மையாயுரைப்பர்மேலோர் ... .......................(௰௪)

மனைவிதன்கொழுநற்கீன்றோன் மற்றவனருளினாலே, யனையவ ளயலார்க்கீன்றோ னருட்பொருள் கொடுத்துக்கொண்டோ, னினிதுறதெத்துமைந்தன்மகவெனப்புகுந்தமைந்தன்,றனைய செய்தன்னாலாவி யுய்ந்தவன்றனையராவார் ... (௰௫)

ஈங்கிவர்முறையிற்றாழ்வ ரெனவெடுத்தியம்பிச்செப்ப, பூங்கழற்குமரன்றன்னை வருகெனப்புகன்றுநோக்கி, யாங்கவனிலக்கணங்க ளியாவையுமறைவலென்னத், தூங்கிசைமகதியாழ்நாரதன்சொல்லலுற்றான் ... ... ... (௰௬)

கடிகொள்குங்குமச்சேறாட்டி நாலிரண்டாற்காமனன்று, னடிமுதன்முடியீறாகநூன்முறையளந்துநோக்கி, னெடுமையுங்குறுக்குநூற்றெட் டங்குலமாகினீர்சூழ்,படிமுழுதுலகங்காக்குப்பார்த்திபனாவனின்றோன் ... ... ... ... (௰௭)

ஐந்துநீண்டைந்துநேர்ந்து வாறிடமுயர்ந்தேழ்சேந்து ..* முந்துமூன்றகன்றுமூன்று குறுகிமூன்றாழ்ந்திருக்கு, மந்தமில் குணங்கள்முப்பானிரண்டொ டமைந்தமாந்த,ரிந்திராதிருவினோங்கி யினிதுவீற்றிருப்பர்மாதோ ... ... ...(௰௮)

நீண்டிடமைந்துகண்கைகரப்புநீண்முழந்தாண்மூக்கு,மாண்டுநேர்ந்திருக்குமைந்து மயிர்விரலுகிர்தோல்வெண்பல், லீண்டுயராறுநெற்றி தோள்வயிறுகைமூலம்,பூண்டியிலங்கொள்ளுமார்பம் பொற்புடைப்புறங்கையாமால் ... ... (௰௯)

ஏழிடஞ்சிவத்தலங்கை யிணையடிகடைக்கணல்லணங், கீழிதழ்நாக்காகுங்கிளர்த்தியவகலமூன்று, தாழ்மருங்ககலநெற்றி குறுகுமூன்றிடங்கள்சாற்றிற், சூழ்கபோலம்முழந்தாள் சிறுத்தாண்குறியுஞ்சொல்லும் ... ... ... ... (உ௰)

மூன்றிடமாழ்ந்தனுந்திமொழியுடனூற்றலின்னை, வான்றவிச்சிறு
வல்றன்பாலமர்ந்தனவன்றியேயுந், தோன்றருன்மேன்மையாக
த் தோன்றலாலங்கைவன்மை, யேன்றியல்பாதலான்மற் றிவனி
றையாகுமன்றே ... ... ... ... (உக)

சிறுவிரனன்னிலின்றுந் தற்சனியளவுந்திரா, வுறுவனாகிடந்
தவாற்று லொழிவரூமாயுளெய்து, நறுமலர்த்தாள்களொத்துத்
தசைந்துவேர்வெழாதுநன்கா, யுறுபரடொத்தவாற்று லுலப்ப
றுதிருவனுவான் ... ... ... ... (உஉ)

அங்கையில்வரைகளற்ப மாகியுஞ்சிவந்துமேய, சங்கொடுகு
லிசநேமி தருவொளிர்மகரம்போல, விப்பிவன்றன்பால்வாய்ந்
த விலக்கணங்கிடக்கைதன்னாற், பொங்குயர்வெறுக்கையெய்திப்
புரந்தரன்போல்வனன்றே ... ... ... (உங)

நெற்றியிலேந்துகீற்று நிலவலால்வலமதாகச், சுற்றியோர்தாரா
யாய்நீர்வீழ்ந்தலாற்றுணைப்பொற்றளி, றுற்றுமேனோக்கிரேகை
கிடத்தலாலொழுகுதாளுட், பொற்புறுகமலவாசம் போலுமென
க்கமழ்ந்தவாற்றால் ... ... ... (உச)

கைவிரனீக்கமின்றி யிருத்தலாற்கண்கடேன்போற், செவ்வி
வாய்த்திருக்குமாற்றாற் சிங்கத்தின்வயிறுபோல, வவ்வயினமை
தறன்று லாயுளுந்திருவுமல்கி, யெவ்வெலாத்திசையும்போற்ற
விம்பமுற்றிருப்பன்மாதோ ... ... ... (உரு)

இலக்கணமுடையனுகு மீங்கிவன்பன்னீராண்டி, னலக்கணுற்
றுவிசோரவசனியேறநாந்துவீழ்ப், விலக்குவதுண்டே னீவிர்
விலக்குகவென்றுகூறி, நலத்தருமகதிவீணைநாரதன்போயினனே

நாரதன்மொழிந்ததெண்ணி நவையறுமன்னியோடுஞ், சீர்கெ
ழுமறைவலாளன் றேசழிந்தாவிசோர, வாரிபளிநெடுங்கண்போ
ர்ப்ப மற்றினியென்செய்வோமெம், றேர்கெழுகுமரற்புல்லியி
டைவிடாதரற்றுகின்றான் ... ... ... (உஎ)

ஆற்றருந்தவங்களியாவு மாற்றியுமளப்பில்கால, நோற்றுநற்
றுணைமெய்திருவலருமறையால்விண்ணோர், போற்றியுந்தமியே
னிந்தப் புதல்வனைப்பயந்ததெல்லாங், கூற்றினுக்குணவாய்வா
னா கொடுப்பவோவென்றுரைத்தான் ... (உஅ)

பொறியிலாக்கொடியேற்கென்றோ புதல்வனையளித்தானெந்
தை, யறநெறிதிறம்புகின்றேற் கருமகவிருக்குங்கொல்லோ,மறு
குபுன்னரகினின்று மற்றினியெடுப்பாரியாரென், றுறுதுயர்க்க
டலின்வீழ்ந்து கரைபெறுதுழல்கின்றானே ... (௨௯)

மாலயன்முதலோருய்ய மறிகடலகட்டிற்றோன்று, மாலமுண்
டிருண்டகண்டத் தமலவென்றுரைப்போர்தம்பாற்,காலன்வந்த
ணுகான்கால காலநீ யளித்தவிந்தப், பாலனையளித்தல்வேண்டு
மென்றுயிர்பதைத்துச்சோர்ந்தான் ... ... (௩௰)

தந்தைதாய்வருத்தநோக்கித் தளர்ந்திட றவிர்கமுக்க, ணெந்
தைசீறடியார்தம்பாலெய்திடாவெரிகட்பேழ்வாய், வெந்திறற்கூ
ற்றுமஞ்சு மசனியோவீழுமெண்டோ, ளெந்தனைன்மலர்த்தாள்
போற்றி யாங்கதுதடுப்பேனென்றான் ... .... (௩௧)

ஆங்கதுகேட்டலோடு மையறன்குழைத்தாய்தண்ணந், தீங்கதி
ர்க்குழவித்திங்கட் கண்ணியன்செய்திகேட்டி,பூங்கழல்வழுத்து
கின்ற பாலற்காய்ப்புகைகுலாய, வோங்கழற்றறுகட்கூற்றை யு
தைத்துயிரளித்தானன்றே ... ... (௩௨)

ஆசறுசுவேதகேது வாருயிருய்யக்கூற்றின்,பாசமதொழித்து
க்காத்தான் சிலாதன்மெய்ப்பாலனாவி நாசமதுறுமற்பற்று நம
னையாங்கடர்த்தான்விண்ணோர், வாசவனாவியுய்ய மறிகடனஞ்ச
முண்டான் ... ... ... .... (௩௩)

நிலந்தலைமயங்காவண்ண நெறியலாநெறிமேற்கொண்ட, சல
ந்தரனாவியுண்ணத் தாளினானேமியுய்த்தா, னலந்தலைவிளைக்கும்
வெய்ய வந்தகாசுரன்றன்வாழ்நா, ளுலந்திடவளப்பில்காலம் வெ
யிலிடையுலர்த்தினானே ... ... ... (௩௪)

வடவரைவில்லதாக வாசுகிநாணினேற்றிக், கடனிறவண்ண
னம்பாக் கதழெரிநுதியதாக, வடையலர்புரந்தீமூட்டு மறனிறக்க
டவுட்போற்றி, யிடிவரல்விலக்குகென்ன வேத்தினன்விடைகொ
ண்டானே ... ... ... ... (௩௫)

களங்கனியனையமேனிக் கண்ணனுங்கமலத்தேவு,மளந்தறிவரி
யதாகுங் காசியிலடைந்துபின்னர்த், துளங்குநீர்க்கங்கைமூழ்கி
த் தூமதிக்கண்ணியானை, யுளங்கனிந்துருகப்போற்றியுவப்பொ
டும் வழிபட்டானே ... ... ... (௩௬)

முத்திவான்றருவினின்ப முதிர்ந்தநன்கனியோதூய, சித்திந
ல்முளையோமுத்தித் திருமகளேந்தும்பந்தோ, மெய்த்தவரிதய
நீங்கா வெஃறுவெளிச்சுடரதேயோ, வித்தலையெய்தியார்க்கு மரு
ள்புரியிலிங்கமாதோ ... ... ... ... (௫௭)

இன்னிசைக்கிழவன்முன்ன ரியம்பியநெறியாலீசன், பொன்
னடிபரவப்பெற்றே னென்றுளமுவகைபூப்பத்,தன்னுடைப்பெ
யராலாங்கோ ரிலிங்கந்தாபித்தியார்க்கு,முன்னரும்விரதமொன்
று முறைபிறழாதுநோற்றான் ... ... ...(௫௮)

குடங்கணூற் றெட்டிற்கங்கைக் குளிர்புனலேந்தியன்பினு
டன்றினந்தோறுந்தெய்வ வுருத்திரசமகத்தாட்டித்,தடந்திகழ்கு
வளையோராயிரத்திருநான்குசாத்தி, யடங்கலார்புரந்தீமூட்டு ம
ண்ணலைவழிபட்டானே ... ... (௫௯)

மென்பழத்துறுதிங்கள் வீழ்சருகாறுதிங்க,ளின்புனலாறுதிங்க
ளெறிவளியாறுதிங்க, ளஃதுடனருந்தியீராண் டருந்தவமிழைத்
தபின்னர், மின்பயிலசனியேறு வீழ்நாளடைந்ததன்றே. (௬௰)

அவ்வழிச்சிறுவன்முன்ன ரகலிருவிசும்புகாக்குந், தெய்வவேவ
யிரவொள்வாட்புரந் தரன்வந்துசேர்ந்து, வெவ்வினையறநீயாற்
றுந்தவத்தினால் வியந்தேன்மைந்தா, வெவ்வரங்கேட்டியேனுந்
தருகுவனியம்புகென்றான் ... ... (௬௧)

மணிநிறவண்ணனஞ்செங்கேழ் மலரயன்முதலினோரா, யனுவ
லவேனுமுள்ளத் துணர்கிலேனமலனன்பர், துணிவுறி னவர்கட்
கெய்தாப் பொருளெவைசொல்லினன்றோர், பணிதலைக்கொள்
ளுநீயோ வளிக்குவைபகர்தியென்றான் ... ... (௬௨)

அந்தணச்சிறுவன் கூறக்கேட்டலுமழலுநெஞ்சத், திந்திரன்
சினமீக்கூர வெஃகினும்வலியன்கொல்லோ,சந்திரமௌலிபே
தைமதியினைத்தவிர்திதாழா, துய்ந்திடவரங்கள்கேட்டியெனவு
வனுரைக்கலுற்றான் ... ... ... (௬௩)

நள்ளிருட்கங்குற்போதிலகலிகைநலனுண்டேகுங், கள்வநின்
வெளிற்றுநெஞ்சம் பிறழ்ந்தவைகழறவேண்டா, மள்ளிலைச்சூ
ல்மேந்தியிடத்தலால்வரங்களோம்ப, கொள்வனோபிறந்துஞ்செத்
துந்துலவியவமரர்சப்பால் ... ... (௬௪)

என்னலுங்கனன்றுசீறி யிருவிசும்பளிக்குமேலோன், மின்னு
குவயிரவொள்வாளுருமுகவிதிர்த்தலோடு, மன்னுநோக்கினை
ந்த னயர்தலுமமலன்றோன்றித், தன்னமர்கையான்மேனித்தைவ
ந்துதளரலென்றான் ... ... ... (௬௫)

அயிலெயிற்றரவமார்த்தோ னங்கையினீவப்பெற்றுத், துயிலுண
ர்ந்தெழுந்தான்போலவெழுந் துறுதுயரநீங்கி, முயலறுதிங்கட்
கண்ணி முதல்வனைக்கண்ணிற்காணூன், மயிருடல்பொடிப்பக்க
ண்ணீர் வார்தரமகிழ்ச்சிகூர்ந்தான் ... ... (௬௬)

திருநகைசிறியகோட்டிச் சிறுவன்வாண்முகத்தைநோக்கி *
வெருவினைபோலுமற்று னுளத்தினைத்தெரியவேண்டி, யுருமுவீ
ழ்குலிசமேந்தியுற்றவனியானேபாரி, லிருவிசும்பினிலென்னன்
பர்க்கியாரிடரியற்றுவாரே ... ... ... (௬௭)

இந்திரன்பதிக்கும்வெய்ய யமனுறைபதிக்குநாப்பண், வெந்
தழற்கடவுளாகி யினிதுவீற்றிருத்தியென்னச், சுந்தரப்பைம்
பொன்மௌலிவிண்ணவர்வணங்கச்சூட்டித், தந்தைதாயோடுமோ
ங்குச் சார்கெனவருளினானே ... ... ... (௬௮)

இங்குநீயமைத்துப்போற்று மிலிங்கமெய்ஞ்ஞான்றும்வெய்
ய, பொங்கழற்கடவுளென்னு நாமத்திற்பொலிவதாக, வங்கதுவ
ழுத்தினோர்மே லசனிவீழாதெவ்வேறுநி, மங்கையோர்பாகன்
றூய விலிங்கத்தின்மறைந்திட்டானே ... ... (௬௯)

ஆரழற்கடவுட்டன்மை யீதெனவறிகவின்னுஞ், சீர்பெறவறி
யற்பால தெரித்துநீகேட்டியென்றுக், காருறழ்மேனியான்றன்க
ணமெடுத்தியம்பலோடும், பாரபுகழ்சிவசன்மாவுப்பரிவொடும்
பகர்தலுற்றான் ... ... ... ... ...(௭௰)

௰௬-வது. அக்கினிலோகங்கண்ட-அத்தியாயம்-முற்றும்.

ஆக-அத்தியாயம்-௰௬-இல் விருத்தம்-௪௭௫.

பன்னிரண்டாவது

சிவசன்மா

# நிருதியுலகமும்வருணனுலகமுங்கண்ட

## அத்தியாயம்.

கலிவிருத்தம்.

எரியின்றன்மை யியம்பினீங்கினி, நிருதிதன்மைநிகழ்த் திடவேண்டுமென், றரியநான்மறை யந்தணன்கூறலுங், கரியமா யன் கணங்களியம்புமால் ... ... ... ...(க)

இழிகுலத்து மியைந்துமறநெறி, வழுவலின்றிமறைதிறம்பா துயர், தொழுகுலத்தவர்தாண்மலர்சூடுவார், விழையுமிவ்வுல கத்திடைமேவுவார் ... ... ... ... (உ)

அரக்கரென்பதை யல்லதுமற்றவ, ரிரக்கந்தம்முயிரென்னவுயி ரெலாம், புரக்குந்தன்மை பொறைநிறைவாய்மையா, லுளைக் கும்வானவர்தம்மினுயர்ந்துளார் ... ... ...(௩)

நண்ணுமித்திசைநாளும்புரந்தரு,ளண்ணல்செய் தியறைகுவ ல்கேட்டியால், விண்ணினோங்குயர்விந்தப்பொருப்பய, லெண் ணில்வேடரிருக்கையொன்றுண்டரோ ... ... (௪)

இங்குமேவியவேடர்க் கிறைவனாய், பிங்கலாக்கனருமறைப் பேரியார், றங்களாக்களிருந்ததோகுநர், தங்களுக்கிடர்தீர்க்கு ந்தகைமையோன் ... ... ... ... ...(௫)

கடவுட்கங்கைசூழ் காசியினேகுநர்க், கடிசில்வைகுமிருக்கை யரும்பொருள், குடைசெருப்புக்கொடுத் தெவ்வெயாசொலி* னிடைதடுக்குநரில்லெனவேவுவான் ... ... ...(௬)

கல்லென்சும்மைத்திரைபொருகங்கையிற், செல்லுமன்பர் க்கிடுக்கண்செயுமென, வல்லியங்களுமுதலையுமாக்களைக், கொல் வதன்றிமற்றியாவுங்குறைத்திடான் ... ... ...(எ)

ஆறலைக்குநராலானன்பருக், கீறிலாமலினிதளிக்குநான் * மாறுகொண்டொருவேடன்வழிச்செல்வோர்க், கூறுசெய்யவொ ரித்[illegible]லைகினன் ... ... ... ... (அ)

அன்னகானிடை யாரிருட்போகினிற், றன்னும்மெய்ப்புலி தொடர்ந்தேகலுந்,தன்னெடும்படைநீக்கத்தமியனாய்ப், பொன்னிறக்கட் புளினனும்வைகினான் ... ... ... (௯)

அருநெறிக்கட்கரந்தமர்வேட்டுவன், பொருவில்காசியிற்போகின்றவன்பனை, யுருமெனச்சென்றாறிமற்றுங்கவர், வெருவயாவும்பறித்திடும்வேலையின் ... ... ... ...(௰)

மங்கைபாகன்மலரடிகைதொழ,விங்குயாங்கள்புகுந்தனமித்தலைத், துங்கவேடர்தொடர்ந்தனரொன்செய்கேம்,பிங்கலாக்கவெனப்பெயரோதினார் ... ... ... ... ...(௰௧)

வெஞ்சினப்புலிவேட்டத்தின்மேவிய, செஞ்சிலைப்பிங்கலாக்கன்செவியிடைத், தஞ்சமில்லவர்சாற்றொலியேற்றது, மஞ்சலஞ்சலென்றங்குவந்தெய்தினான் ... ... ...(௰௨)

வெங்கணோக்கினன்வீக்கியகச்சினன், சிங்கவேற்றினெழுமுடிச்சீற்றத்தன், கங்கைசூடினன்பனைக்காய்ந்தினி, யெங்குமேவுதிரென்றெதிர்ந்தானரோ ... ... ... ...(௰௩)

ஈறிலாமலியானிங்கிருக்கவு, நீறுபூசிதனன்பனைநீவிரோ, வாறுசெய்குவிரொன் றுலையாடினான், மாறடர்த்தவரிவிற் றடக்கையான் ... ... ... ... ... ... (௰௪)

வரிவிறன்னொலிகேட்டிகல்வஞ்சகர், வெருவியோடலும்வேதியரியாலாயும், புரியினூப்த்துவெம்போர்க்கறைகூவிமேற்,றிருகுவேடர்முன்சென்றெதிர்ந்தானரோ ... ... (௰௫)

சிறார்க்குநங்குலச்செய்தியொழிந்திவன், மறக்குலக்குவழூவெனத்தோன்றினான், றெறுத்துமியாமெனவொக்கலைக்கூவினார், * வெறித்தருஞ்சியம்வெள்ளியங்கன்னினான் ... ... (௰௬)

ஆங்கவன்றனிகூவநின்றார்த்துடன்,வீங்குதோளினர்வில்லினர்வாளினர், பாங்கரிற்பிங்கலாக்கனைப்பற்றுபு, வாங்குதெண்டிரைபோல்வளைந்தாரரோ ... ... ... ...(௰௭)

முற்றுசேனைமுரட்டபமெய்ந்நல்புடன், செற்றமின்றியெதிர்ந்துசெருச்செய்வ, மற்றநோக்கிக் கவசப்வில்வார்களை, துற்றுமாவடிவை தூளித்தாரரோ ... ... ... ...(௰௮)

வில்லும்வாளியுமின்றிவெறுங்கையான், மல்லலேறனையானலிவாய்மடித், தொல்லைமுன்சென்றமரினுழக்கலுங், கொல்சினத்தேரரக்கல்குலைந்திட்டான் ... ... ... (௰௯)

கரியகந்தரக்கண்ணுதல்வானவ, னுரியவன்பர்க்குதவிபரிந்து வெஞ், செருவிலாருயிர்நீத்திடுஞ்செய்தியா, னிருதியாயினனெ ன்னநிகழ்த்தினோர் ... ... ... ... (௨௰)

நிருதிசெய்திநிகழ்த்தினர்நீதிசால்,வருணன்செய்திவகுத்துரை ப்பினெனச், சுருதிநூற்றுறைபோயவன்கேட்டலும், பொருவி ன்மாயன்கணங்கள்புகலுமால் ... ... ... (௨௧)

முன்னைநான்மறையாளர்க்குமுத்தமிழ்,கன்னலோடுங்கழனி யளித்துளோர், துன்னுதீர்த்தத்துறைபடிகட்டினோர், மன்னு வெஞ்சிறைவல்லிவிடுத்துளோர் ... ... ...(௨௨)

முறையினீட்டுபொருள்கொடுமொய்ம்மலர்,த்துறைகொள்வா விகுளப்பலதொட்டவர், நெறியிற்சாலைதண்ணீர்ப்பந்தர்வைத் துளோ, ருறைவராலிவ்வருணனுலகினே ... ...(௨௩)

உருத்திரந்தெருமுதியோகினுறங்குமோர், கருத்தமட்டிரசாப திகண்ணென, வருத்திசேர்மகவாயசுசிட்டுமான், விரிந்ததெண் டிரைநீர்த்துறைமேவினன் ... ... ... (௨௪)

உறுதவத்துமுனிவருயிர்நிகர்,சிறுவரோடுமச் சோலைநிற்சே ர்ந்துயர், நறியதிட்புனலாடலுநண்ணியோா, கறவுபறவைக்கரா ங்கவர்ந்தேகிற்றுல் ... ... ... ... (௨௫)

முதலையொன்றுயிர்வௌவமுனிவநின், மதலைவீய்ந்தனனெ ன்றமறையவர், புதல்வர்வந்துபுகலவுங்கேட்டிலா. வேதயமீச ன்பதத்திலிருத்தலால் ... ... ... .. (௨௬)

அண்டகோடிகளியாவுமரனுழைக்,கண்டயோகங்கனிந்தறவ ற யந்தனன், மண்டுநீட்பணமேலொடுதலைமைத்தலைத், திண்டிறற்கரா ம்பற்றுபுசேறலும் ... ... ... ... (௨௭)

முழங்குதண்புனற்றேவிமுதுக்கரா, விழுங்குமைந்தனைவெய் யகராந்தொடுந், தழங்குவாரியினுய்ப்பத்தழலெனப், புழுங்கி யோர்கணநாதன்பொருவிலான் ... ... ...(௨௮)

தெண்டிரைக்கடற்செல்வனைநோக்கிநீ, யண்டர்நாயகனன்ப ன்புதல்வனைக், கொண்டுவந்தெவனெனக்கூறலு, மண்டுதெண் டிரையுள்ளமறுகியே ... ... ... ... (௨௯)

மறுவில்செங்கதிர்மாமணியாலையுஞ், சிறுவன்மேனியிற்சே ர்த்திமுதலையோ, டெறிதிரைக்கடலெய்தியதன்மையாங், கறிவி க்கினனைப்பொறிசெற்றுளான் ... ... ...(௩௰)

இன்னநோக்கிமுனிவனிருத்தலும், பன்னுநான்மறைப்பால
னையார்கலி,யன்னவெய்யகராத்தொடுமோதினன், முன்னருய்த்து
வணங்கிமொழியுமால் ... ... ... (௩௧)

ஆதிநாதவடியன்பிழைத்திலன், காதிவெய்யகராங்கவர்பாலனை
ச்,சீதவான்புனற்றேவியென்பாலுய்த்தாண்,மாதவர்க்கிம்மகவை
யளித்திடால் ... ... ... ... (௩௨)

அண்ணனின்னுடையன்புதல்வனென், றெண்ணரியோர்க
ணைநாதனிலைசெத்திட,வுண்ணெகிழ்ந்தியிங்குய்த்தனனாலெனத், தண்ண
ந்தாமலர்த்தாள்பணிந்தேகிற்றே ... ... (௩௩)

கள்ளயர்வுயிர்க் குங்கமழ்ந்கொன்றையோன், றெள்ளுநான்ம
றையோய்நின்சிறுவனைக், கொள்கவென்னவயனுங் குறிக்கொ
ளா,வுள்ளமின்புற்றியோகமொழிந்திட்டான் ... (௩௪)

சேய்ந்தகண்ணுஞ் செழுமலிமார்பமும், தோய்ந்தகுஞ்சியுஞ்
சோர்வுறுமுள்ளமுங், காய்ந்தவெங்கட்கராங்கவர்கைபடா, யே
ய்ந்தமைந்தனைநோக்கினனெம்பிரான் ... ...(௩௫)

அன்பினேடுமடிதொழுமைந்தனை, யின்பமெய்தத்தழீஇயவி
ருந்தவன், றன்பெருந்தவநோக்கித்தனையனு,மன்பெருந்தவமா
ற்றன்மனங்கொண்டான் ... ... ... ...(௩௬)

தந்தைநல்லருள்பூண்டெழில்விழி, யெந்தைமேவியகாசியிலே
கித்தன், சிந்தைகூரச்சிவலிங்கமொன்றமைத், தந்தமில்லதோர்
மாதவமாற்றினன் ... ... ... (௩௭)

ஆற்றுநற்றவநோக்கியகமகிழ்ந்து, தேற்றினேறுமிறைவன்மதலை
பூண், டேற்றிவேட்டன கேளெனச்சொற்றலும், போற்றிதெ
சங்குழையப்புகல்வனால் ... ... ...(௩௮)

தனிநறவுமிழ்கொன்றையந்தாரினோய், நளிபுனற்கிறையாம்
வரநல்குதி, யளியனுக்கெனத்தாழ்ந்தடிபோற்றினான், வெளிறெ
றிந்த விரிதருகேள்வியான் ... ... ... (௩௯)

கருணைவெண்பிறைக்கண்ணியன்றுவருங், கருணையோர்திகடற்கி
றையாகநல், லருணயந்திட்டமார்குழாத்தொடும், வருணனென்
று மணிமுடிசூட்டினான் ... ... ... (௪௦)

சீர்கொண்மைந்தநீ போற்றுசிவலிங்கட், பேருநின்பெயராக
ப்பெருந்தவத்; தார்வமோடுமருச்சனைசெய்குநேரா, நரனைய்
துநோ யாவையுநீங்குவார் ... ... ... (௪௧)

என்றுகூறியிறைவன்மறைதலுந், தன்றுணைப்பெருஞ்சுற்ற ந்தானுமாய்,மன்றநாளும்வருணன்பதத்தினி, லொன்றியின்புற் றுவந்திருந்தானரோ ... ... ... (சஉ)

௰உ-வது-நிருதியுலகமும்வருணனுலகமுங்கண்ட

அத்தியாயம்-முற்றும்.



ஆக அத்தியாயம்-௰உ-க்கு-விருத்தம்-சஎஎ.



பதின்மூன்றாவது

# சிவசன்மா

## வாயுவுலகமுங்குபேரனுலகமுங்கண்ட

## அத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.

என்னநெடுமால்கணமுரைப்ப வினியபொருடேர்மறைக்கிழ வன்,மன்னுகார்த்திகைவரன்முறையும் வழுவாதுரைத்திரொன்றோ டும், பொன்னங்கமலத்தயனோடும் புவனம்பூத்தோனருளடியா ர். பன்னுமறையின்பொருடேர்ந்த முனிவரோடும் பகர்தலுற் றார் ... ... ... ... ... ... (க)

ஈதுவனர்காற் றிறைவனைக ரிசிரேன்காமக் குறும்பெறிந்த, நீதிறவத்துக்காசியன்றன் சிறுவன்காசிநகரடைந்து, பாதிமதிசே விலிருதாள் பத்தாறாயிரமாண்டு,காதலோடிலிங்கமிதேத்திக் கருதற்கரியதவம்புரிந்தான் ... ... ... (உ)

ஆற்றுந்தவந்தாலவனமைந்த விலிங்கமதனிலமலனன்பார்க் கேற்றியுனதுதவமகிழ்ந்தேம் விழைந்ததியாதுசொல்லுகென ப், போற்றுமறைதேர்காசியன்றன் புதல்வனுவகைமீதூர,வேற் றுக்கொடியோர்பாதமலரிறைஞ்சியிசைத்தெடங்கினனால (௩)

தண்ணங்கமலை கேள்வனுக்குந் தவினான்முகற்கும்புரந்தரற் கு,நண்ணற்கியைந்தபதங்கொடுக்கு நளிர்மாமதிச்செஞ்சடையி னே,யெண்ணற்கரியமறைநான்குமிதுவன்றிதுவென்றென்பதல் லாற், கண்ணற்கரியா யென்போல்வா ரெவ்வாறுன்னைக் கருது வதே ... ... ... ... ... (௪)

துதியுந்துதிக்கப்படுவோனுந் துதிக்குமவனுமுலகின்ற, விதி யும்விதிலயபளிப்போனு மிவர்களறியாவிழுப்பொருளாம், பதி யுமாகியெவ்வுயிர்க்கு முயிராயவற்றிற்பற்றில்லா,முதல்வநின்னை யுணர்ந்தெவ்வா றெளியேனேத்தமுயல்வதுவே............(௫)

நீருஞ்சுலவிபொறிவளியு நெருப்புப்புதைத்தநெடுவானும் * பாரும்விந்துநாதமுதலெவையுமொருங்கு படைத்திடுமுன் ...* பேரும்வடிவுமில்லாதபெம்மானின்னைத்தனிதுறந்தோ, ரியாரு மறியார்நின்சீர்த்தி யாரேநாவாற்பழிச்சுவனே....... .....(௬)

அருவமாகிச்சலமின்றியொன் றுபுறையுமமைதிதனின், மருவு மிச்சையுயரிச்சாசத்தியாகமறைப்பொருளா,மொருவநீயே சத் திசிவனென்ன விரண்டாயுறைந்தாநம், பொருவிலுருவஞான மிச்சை சத்தியுருவிற்பொருந்தியதால் ... ... (௭)

சத்திசிவமாநுமயிடத்திற் கிரியாசத்தியுதித்தது,ப்பர் ,மொய்த் தவலகில்புவனமெல்லா முறையினுதித்தஞானசத்தி, பெச்சமறு நல்லுருவநீர் கிரியாசத்தியுருப்பிறையை, வேதமெய்லாபிடனாகி ரியாசத்தியுருவாய்வளருலகம் ... ... (௮)

ஆயவாற்றாலனைத்தினுக்கு மையநீயேகாரணமாந், தூயமல ரோவில்வலப்பாற் றுளவநெடுமாலிடப்புறனுந், காயுமெரிசெ ங்கதிர்மதியங்கலைமூன்றுநின்றுயிர்ப்ப, மேயமறையார்த்தெழா புரட்டும் விரிநீர்க்கடனின்வெயர்வாமால் ... ... (௯)

இறைவனினதுசெவிவழியாந்திசையினாந்துநின்றுகர,மறுவி ன்மறையோர்நினதுமுக மற்றன்றடந்தோள் வாள்வேந்தர் * செறியுந்திசைகள்விரித்தசைத்த குறங்குவணிகர்தேவர்முடி, ய றையுங்கழல்கள்சூழ்கிடந்த வம்பொற்சரணம்பின்னையோ (௰)

பெண்ணுமாணுமெனவுறைந்திவ் வுலகமுழுதும்பெற்றாய்நீ* தண்ணந்துளவத்தாரோனுந்தண்டாமரையி னுறைவோனு, மெ ண்ணவரியபரம்பொருணீயென்றேவேத்தியெனக்குவர, மண்ணை னின்மே லன்றெவ்ற மழியாதிருக்கவென த்தொழுதான் (௧௧)

பிரமந்தன்னைமந்திரங்கள் பேசாதுளத்தினினிதமைத்தன், மரு
வரியநிற்குணமாந் தியானந்தன்மாத்திரையைந்தும், பொருவில்
செவியாதியவைந்திற் பொருந்துமளவும்புகாறுமற், றரியதியானம
வைநீங்கிற் சமாதிகாலமெனவறைவார் ..... ..... ..... (௫௯)

கடிகையஞ்சுதாரணையின் காலந்தியானமறுகடிகை; பொடியில்
நாளோர்பன்னிரண்டு சமாதிகாலமுப்பொடுநீ, ரடைதலபோலமனத்
தினொடு மான்மாக்கோத்தல்சமாதியென, வுடையபிராணன்மனத்
தொடுகூடுதலுஞ்சமாதியெனவுரைப்பார்... ..... ...(௬௰)

சிவபரத்தின்சமத்துவமுஞ் சமாதிதன்மைதெறுவெம்மை, யே
வரியசுகதுக்க நீங்கியான்மாவல்லதைவே, றியாவுமிலதென்றுயர்ப
ரத்தி னெய்திச்சமாதியிருப்போனை, நோவுதழனீர்படைவினைகள்
வருத்தாவென்னறுவன்றனரால் .. ... ..... ......(௬௧)

இனையவாறுசமாதியினி லிருக்கும்யோகிதத்துவிந்து, தனைவி
ற்காணுமாங்கதுவு மனோவாக்கிவற்றாற்றொடர்வரிதாய்த், தெளியோர்
பொருளாயிருக்குமதிற் சடங்கயோகங்கவந்தோர், கனிசேர்பாலி
ற்பால்சேர்ந்த பான்மைபோலக்கலந்துறைவார் (௬௨)



எற்றமாமுத்திரையொடுநபோமுத்திரையுட்டியானமெனச், சாற்
றுமுத்திரையரியசலந்தராமுத்திரைநன்மூலபெந்த, மாற்றலுடையி
ம்முத்திரைக ளறிந்தோன்யோகியாங்கவற்றிற், போற்றுமாமுத்தி
ரையின்விதி யாருந்தெளியப்புகலுவாம் .... ..... ...(௬௩)

கூடுமாமுத்திரைவலக்காணீட்டியிடக்கால்குதத்தழுத்தி, நீடுதா
ளையிருகையாற் பிடித்துநாடிவளைத்துநிறைந், தோடுபிராணன்றனை
மாறி மாறிவிடுதனுவுலர்த்தல், நாடிசோதித்திடல்மதிய மிரவிகூட்
டலெனநவில்வார்... ... ... ... ... ......(௬௪)

நாவைக்கபாலத்துடேற்றிப்புருவநடுவினோக்கமைத்து, மேவுந
போமுத்திரைவயிற்றினுகநாபிமேலாக, நாவிச்வெளினிற்றுறைதல்பிரா
ணவாயுத்தனைநிறுத்த, லோவிலுயிருட்டியானமிதுடயின் றோர்வா
னத்துலாவுவார்... ... ... ... ... ....(௬௫)

வாயுவதனால்நரம்புகளால் மிடற்றையிறுக்கிக்கீழ்வதிந்த, தீயின்மதியக்தமுதொழுசாப் பிராணன்வளியின்செல்லாது, மேயவிதனைச்சலந்தரமுத் திலாயாமென்னவிளம்பினரா, லாயுமறையின்பொருளனைத்துந் தமதாமென்னுமறிவுடையோர் ...... ...(௪௬)

குதியோரிரண்டால்யோனிதனை யிறுக்கிக்குதத்தையுள்வாங்கி, விதியினபானவாயுவினை மேலேயேற்றிப்பிராணனுக்கு, மெதிருமபானன்றனக்குமிவை மெய்துமலநீரொய்தாது, முதிருங்கிழவற்கினைமைவரு மூலபெந்தமிஃதாமால் .. ..... ..... ...(௪௭)

மருவுபிராணன்மேலெழுக்க வபானவாயுகீழிழுக்கப், பெருகுநாயரின்வருந்தாது கூடுமவன்பேசரும்யோகி, பொருவிலகரத்தாற் போந்துசகாத துட்போமசபைதன்னை, யிருபத்தோராயிரத்தறுநூறுருவேற்றிடுநல் லுயிர்சீவன் .. ... ... ......(௪௮)

கலைகளனைத்துந்தெளிதலா மகளிர்விழைதல்கணமொன்றி, லுலகமியாவுந்திரிந்திடுதல் சிறுத்தல்பெருத்தலுடலதனி, லிலகுமொளிகண்மனந்தோன்ற லெவற்றின்பாடைகளுமறித, லலகில்புவனத்தனித்தாங்கலாகாயத்தினடைந்திடுதல் .... ..... .. (௪௯)

சேணிற்பொருள்யாவையுங்காண்டல் செகத்துளொளிகளெளிதுணர்தல், மாணுற்றுயர்யோகியர்க் கிவைகளிடையூறிவற்றின்மனஞ்செலுத்தா, தியாணர்க்கோங்கு முகிண்முலைய வேழைபாகனிணையடியைக், காணுற்றுள்ளங்கசிந்துருகி யிருப்போர்முத்திக்கடற்படிவார் ... ... .. ... ... ... ...(௫௰)

இனையவாற்றலியோகங்க ளியற்றியுடலமிகவருந்தி, நினைதற்கரியதனிமுத்தி நெறியினடைகவிதுவன்றித், தனைவிலுடலம்வருந்தாதுமுத்தியடையத்துணிந்தோர்கள், கனைநீர்க்கங்கைசூழ்காசி யடையவேண்டுமெனக்கனாந்தார்... ... ... ... (௫௧)

௪௰-வது-யோகநிலையுரைத்த அத்தியாயமுற்றிற்று.

ஆ விருத்தம்-௲௯௰.







# அவிமுத்தேசன் கதையுரைத்த அத்தியாயம்.

சீர்கொண்டமலரயனுந் திருமாலுங்காண்பரிய, வேர்கொண்டபேரொளியை யெளியேன்றன் னுள்ளத்தே, நீர்கொண்டகாசியினு நிலவுபழமறைக் கொழுந்தைக், கார்கொண்டமணிமிடற் றெங்கண்ணுதலை வழுத்துவாம் ... ... ... (க)

வேறு.

தேசுறுஞான மனப்பிறழ்யோகஞ் செய்திடினலதுசேர் வரிதாற், காசியினடையிற் கணத்தினின்முத்தி யெய்தலாமெனக்கரைந் தனையால், மாசிலந்நகரின் விடாதுறைபரமன் கதையினைவழங்கென முனிவன், பேசவுமவுணரிரத்தமுண்டொளிரு மிலங்குவேற் குமரனன் குரைப்பான் ... ... ... (உ)

மற்றையதலங்க ளெவற்றினுந்தவத்தால் யோகினால்மருவருமுத்தி, பெற்றிடல்வேண்டுங் காசியில்வாளா வுறைந்திடின்முத்தியாம் பெட்பு, ஞற்றவணிங்கா வுறைதலேயோகமோ மனமலரிலையதே தானவ், சறையங்கதிர்கால் முத்திமண்டபத்தி லிருப்பதேசருதரு தியானம். ... ... ... ... (ங)

அளப்பருங்காலை மைந்தமுன்னாப்பணருந் தவம்புரிந்தவர்பெறும்பே, றளத்திலிமேவப் புற்றுச்சியவளிசேகா தசியினிலுண்டிநீத் துறையிற், சளிச்சரும்பாற்றுஞ் சடிக்கையநீங்கரியற் கண்ணுதலளிக்குநின்போல, வளத்தநற்காசி பிரிந்திறைவருந்துங் கதையினைக்கேளென வழங்கும் ... ... ... (ச)

அருமறைக்கிழவர் முன்னமோர்பிரமகற் பத்திற் சுவாயம்புமனுவா, மொருபெருந்திகிரி மன்னவனிறப்பவறுபதாண்டுறைபெய விண்டிட், பருவரலுழந்தாங் குலமெலாங்காடாய்ப் பயின்மகவில்திநன் னிலைமை, நிரிதருங்கமலப் பொகுட்டினிலிருக்கு மறையவன்சிந்தையி னினைந்தான் ... ... ... (ரு)

ஆழியொன்றுருட்டி யுலகெலாம்பரக்கு மரசனையின்றி யிவ்வுலகந், தாழ்வுறுயருழந்த தெனமனத்தெண்ணித் தவறிகிரிசராதுலத் துதித்த, புழியெவ்வுருகு மனையவேந்தனக்கைப் புகுமாவிரக்கநினைந்த தாகத், பாழிபத்தடந்தோள் மன்னவன்காசிப் பதியினிற்றவஞ் செயக்கண்டான் ... ... ... ... (சா)



௪௰-வது

# திவோதாஸனையோட்டிற்படுத்த

## அத்தியாயம்.

விண்ணவராகன்றம் பதியுறையவிரிபுனற் கங்கைசூழ்கிடந்த
வண்ணலங்காசிதனிற்றிவோதாஸ னரசுபூண்டளிக்குநா ளதனில், க
ண்ணுதல்முதலோ ரவனரசாளியைசையாதுற்று வான்றெருமதிக்காசி, த
ண்ணியதுறைத்துமென முனிகேட்பநாமவேதம் பன்னவனுரைப்
பான் ... ... ... ... ... (௧)

நாகிளந்திங்களைவை நீணாமுகிழ்க்குநளிர்சடை வானவன்முத
லோர். போயபின்னர் நிருதிலமுழுதும் பொதுவறவொருகுடைநி
ழற்றி, வேகவெஞ்சிலைக்கைமருமலர்க்கடற்றுவிளைவளந்தருமலர்ச்
சோலை; மாகமூடறுக்குங் கொடிநெடுவீதிமாநகர்க்காசியி லிருந்
தான் ... ... ... ... ... ... (௨)

செயிரிடைச்சிற்றப் பகைதரும்விழிக்குந் திமைகூரிதயமெ
ன் மலர்க்கும், வெயில்பொழிந்திமைக்கும்வெங்கதிர்ப்பருதிவேந்த
னேபோன்றமென்றான்று, மயிரொளவியந்து தன்னுடைமடைந்
தோர்க்குயர்விசும்பைபயினொடுமுந்த, மயலடைகிடக்குமுழுமதித்
திங்கள் முதல்வமேபோன்றும் வீற்றிருந்தான் ... ...(௩)

குனிசிலைக்குபேர் குழைடயநாண்பிணித்து குருதிநீராட்டுவெம்
பகழி, முனிவிலிற்றுங்கிக் கைவிநெடுங்கோட்டு மரிவெங்கடாக்களி
றுகைத்துத், தனிவிசும்பளிக்கும் வானவனென்பர் தரியலருயிர்செ
குப்பதனுற், கனைகுரத்புரிகோட் டெருமையேறுகைக் குங்கதழ்சி
னமறலியென் றுரைப்பார் ... ... ... (௪)

எற்றெதிர்செரடியபகை நெடுங்காளிர் கெரிசுடர்வழங்குதீக்க
டவு, ளாற்றல்வெம்பாசத்தொன்னலர் கடந்தவென்றியா லாழ்கடற்
றிறைவன், போற்றுமிவ்வுலகி லுயிரெலாமுயிரிற் புரப்பவனும்
பொருளெவையு, மாற்றிடாதெவர்க்குமுதவலாலளகை மன்னவ
னென்ன வீற்றிருந்தான் ... ... ... (௫)

வாட்படையுழவர் கூற்றெனத்தெழிக்கு ளாட்பிணுட்பார்க்கரு
ம் பலத்தால்; கோட்புலிப்போத்தி லீருரிபுனைந்தகூன் பிறைக்கண்

ளிபஞ்சடிலச், சேட்டிமைப்பருதியோட்டறநிவந்ததிரள்வரைப் பு
யவலிபடைத்துப், பாட்டளிதுதைதரும் பசுந்துழாய்ப் படலைப்பங்கயச்
செங்கண்மாலனையான் ... ... ... (௬)

எண்ணிருகலைபாலுள்ளமே மாப்பவிருவிசும் பியங்கியமதி
போல், தண்ணருமென்னையன்ன கலையொடுநிறைந்த வாக்கினை நாகரா
சாந் திருவர், பண்ணைவருருவு காத்துவைத்தன்றேரன் டணிந்தனபுரிகு
வரென்று, வண்ணறஞ்சீர்த்தியா யிரம்பருவாய்ச்சேடனையன்றியா
ருரைப்பார் ... ... ... ... (௭)

நனைந்தலைபுலவ மொருகுடைநிழற்று நானிலமேற்கின்னையந்
நீஞ்சொற், கனிந்தழகொழுகும்பசுங்கனைத் தோட்கருங்கயல்ம
ருட்டுவாட்டடங்கண், மனக்கவருருவச்செழுமகொடிப்புருவவாளா
க்கூட்டிதழ்க்கனிவாய்; பனங்கமோகினியைப் பஃறலைச்செஞ்சுட்ட
ண்கெழு சேடன்வந்தனித்தான் ... ... ... (௮)

ஆக்கவடனை வேட்டிள முலைப்போகமருந்திமற்றிவணிகர்வன
ப்பிற், பூக்குழைமாதர்பலரொடு முயங்கிப் பொற்பொடு புதல்வ
ரைப்பயந்து, வாங்கிருஞ்சிலைத்தோட் புரவலன்புரப்ப மழைவள
ஞ்சுரக்குநன்னாட்டி, னீக்கரும்பெருமைதன்னை யீங்கெவர்க்குமிற்
றெனநிகழ்த்துமாறரிதே ... ... ... (௯)

இன்னையங்குதலைமொழி யினுங்கனிந்தகேழ்கிளாமுதுறழ்நீந்
சொ, லொள்ளிழைபவரி லருந்ததிகற்பின் வழியிருவொருவருமிலை
வெள்ளிவெண்புரிநூல் விளங்குபொற்றடந்தோள் வேதியர் தப்பி
லைந்நூன்றாந், தெள்ளிதினுணர்ந்து மறைவழியொழுகுஞ் செய்
தியிற்றிறம்பினோரில்லை ... ... ... ... ...(௰)

அழன்முகம்பழுத்த வாடகப்பசும்பொ னூரம்வீற்றிருந்துவெ
ங்கதிர்கா, லொழுவொளித்தடந்தோள் வேந்தரிற்பகைத்த புயவலி
யொழிந்துளோரில்லை, முழுதுணர் கேள்வியுடைப் பெருங்கேண
மைவணிகரில்முழுதுலகனைத்தும், விழைதகவுடைய பொருணிதிய்ட
டும் விழைபம்விட்டுறைகுநரில்லை ... ... ... (௰௧)

கண்ணுழற்சீற்றத் துனைபெயிற்றகல்வாய்க்கட்செவிப்பணுமு
டிக்கிடந்த, மண்மகள்பயந்த பின்னையுந்தமிற் றந்நிலைவழுவினரி
லை, யென்றுநால் வருணத் தவருமற்றவரிற் பிறந்துளோர்களுந்தமா
தியல்பின், நன்னுனான்றியல்லா ரிநூநிநெறிநடக்குநரிலை ( )

கொடைக்கடனிறுக்குந் தடக்கைவேளுழவ னளிக்குநாடெவற்றி
னுங்குறையா, வுடைப்பெருஞ்செல்வ ரல்லதுவறுமை யுழந்துளோ
ரொருவருமில்லை, விடற்கருங்கற்பின் றம்மனையலது பிறமனைவிழை
குனரில்லை, யிடர்க்கடற்புணையாய்ப் பிறவிவேரறுக்கு மகவிலாதுறை
குனரில்லை ... ... ... ... ... ... ... ... (௰௩)

குழைமுகந்தூங்குசெம்மணிப்பசும்பொற்குண்டலவேதியர்நாளு,
மழல்முகத்தாற்று மருமகத்தன்றிச் செந்தலைசயருந்துனரில்லை, வி
ழைவொடுபெயர்ந்தோர்ப் பழிச்சிடாரில்லைவெங்கவராடுனரில்லைக், கழி
பெருங்குணத்துக் குரவரைப்பிழைப்போ ரரும்பொருள் கவருன
ரில்லை... ... ... ... ... ... ... ... ... ...(௰௪)

மழைமுகில்வறப்ப நிலயிசைப்பைங்கூழ் வாடுனரில்லையெஞ்ஞா
ன்றுங், கழிபெருநோயின் வருந்துனரில்லைக் கலியினுமினியமென்ம
ழலைக், குழவியம்பருவத்திறக்குனரில்லைக் குற்றமிலொழுக்கமேயன்
றிப், பழிபடுகரும மென்பதுமறந்து பயில்குனரில்லையப்பதியின்()

ஆறறிபுலவர் தவத்துறைபோய வந்தணர்தொழுவர்மற்றவரு, மூ
றெளிமேயாசைநாற்றமென்சுவையினொழுகிடாத்தொழுவர் மற்றவரு
மீறிலாஞானப் பெருங்கடற்படிந்தோர்ப் பணிகுவரிசைத்தவத்தவரு,
நீறுபூத்தலர்ந்த நெடுநிலாநெற்றி நிகரொறிமுனிவரைத்தொழுவார்()

விழுதுவிட்டொழுகு வெண்ணிலாமுத்தம் விளிப்பெறுந்தெரிம
ணிகுயின்ற, மழகதிர்ப்பசும்பொ னெடுமுடிபுனைந்த வலம்படுதிகிரி
யொன்றுருட்டி, யெழுகடல்வரைப்பு மின்னணம்வழாம லெண்பதி
னாயிரம்பருவங், கழிபெருங்காதல் நிலமகளுவப்பக் களைகணாயினித
ளித்தனனால்... ... ... ... ... ... ... ... ... (௰எ)

தீவிடங்கடைவாய் மடையுடைத்தொழுகு செம்மணிச்சூட்டராமு
டியின், மேவலர்க்கிடந்த கனைகடலாடை வியனிலமுழுவதுமுவப்பக்,
கோவியல்வழாது பகைபுறங்கண்ட குருதிவேன்மன்னவன் காப்பப்,
பூவியல்பொதும்பர் கற்பகநீழல் விண்ணவர்புந்தியினோர்ந்தார்(௰அ)

பூம்பொறிச்செங்கட் சுரும்புவாய்நெகிழ்ந்த புதுமலர்த்தாதுமேய்
ந்துறங்குந், தேம்படுநறிய நறுமலர்ச்சோலைப் பணியிருவிசும்புறை
தேவர், மேம்படுமிவற்ற னிருநிலக்கிழமை விலக்குவமெனக்காகம
லங், கூம்பநாத்தழும்புபடமறைவடித்தநங் குலக்குரவனுக்குலாத்தார்.

விரிதலைத்தெங்கினெட்டிலைப்பொந்தைக்குடக்கனிவீழப்புடை
க்கா, யருவிவீழ்ந்தென்னப் புனலுகுத்தொழுகு மகன்பணைக்காசியினு
றைபுந், திருவநீண்மார்பன் றவத்துறைச்சிறிதுந் திறம்பலனவனுல
களிக்கும், பொருவருசெங்கோ லொழுக்குறவியற்ற லென்னனைப்புந்
தியிற்றேர்ந்தான்... ... ... ... ... ... ... ... (௨௰)

பண்ணவர்மவுலிவெயிற்கதிருரிஞ்சப்பழந்தழும்பிருந்தசேவடிய,
வண்ணலங்குரவ ராழற்கடவு ளின்னெனிலருமகமுதல, வெண்ணரு
ங்கரும மியற்றியாறரிய வெரிக்குழாமுழுவதுமீண்டு, நண்ணுமா
றியற்றி லன்னவன்புரியு நல்லறனிழுக்குமென்றுளாத்தான் .... (௨௧)

ஆயிரஞ்சுடிகை மணிவிளக்கேந்து மழல்விழிப்பாந்தண்மேற்கிட
ந்த, மாயிருஞாலத் தெரியெலாமலைமுத்தி யென்றுவண்டேறல்கொ
ப்பிளிக்கு, மீப்புயர்பசும்பொற் கற்பகநீழல் வேந்தெடுத்துரைத்து
ம்வினாவிற், காமெரிக்கடவு ளிருநிலத்தெரிகள் யாவையுந்தன்றுழை
க்கரந்தான் ... ... ... ... ... ... ... ... .. (௨௨)

கடற்பெரும்புவியி லெரியெலாஞ்செந்தீக் கடவுடன்றுழைக்கரந்
ததனுற், கொடைக்கடன்பூண்ட ராழிருந்தடக்கைக் கொற்றவேன்ம
ன்னவற்குறுகி, மடைத்தொழிலெல்லோ ராழலிலாமையினுல் வாய்ப
டர்வெய்யவன்கதிரி, லடப்பம்வனை யமைத்தனமென்ன வரசனுஞ்
சிந்தையுற்றிருந்தான் .... ... ..... ..... ... ... ...(௨௩)

நம்முடைநகரி னழலன்று நளிகடற்பாரழலெவைய, மம்மவோ
வமரர் புணர்ப்பினுற்கரந்த தாமெனவென்றுறுமெல்லைவச், சும்மை
நீர்வேலி யுலகினிலமர்ந்த யாவருந்தொழுதகையினராய்த்,தெம்முனை
கடந்த சிலைவேற்றுனை செழுமணிவாயிலினடைந்தார் ... (௨௪)

கடுபொரிசிதறு மெரிமுகக்கடவு ளின்மையாற்சிறுகெடல்வளாகந்,
தடையுறற்கரும முதலவேள்விசரு மாற்றுதலொழிந்தன வென்று,
கடையளந்தறியா விடுநிறைகிடக்குங் கற்றையஞ்சுடாமணிப் பரு
உத்தட், கொடிநெடுவாயில காவலர்க்குணாதனுக்கொற்றவன்றன்று
ழைவிடுத்தார் ..... ... .. ... ... ... ... ... (௨௫)

நாக்கடைப்புரட்டித் திப்படவளைக்கு நகுமணிச்சுடிகைவாளரவின்,
மேக்குறக்கிடந்த வுலகமோரேழும் விரிகதிராழியொன்றுருட்டி, கா
க்குநின்கோயிற் கடைப்புறத்திறுத்த துலகெனவாயிலோர் கழறத்,

திக்கடையொழுகு சிறுகண்மாலியானைச் செம்மலுங்கொணர்கெனவி
சைத்தான் ... ... ... ... ... ... ... ... (௨௬)

வெயிலுடன்றழைத்துக் கிளைத்தபொற்கழற்கால் வேந்தர்கோவப
ணித்தனன்வருகென், றுயர்மணிக்கொடித்தாய் வாயிலாருணர்ப்ப
வொல்லையில்வேந்தவைபுகுந்து, செயிரறுகமல மலரடிதொழுதுஞ்
சிந்தையுற்றவர்முகநோக்கி, வயிரவாட்டடக்கை புடைத்துவெண்டா
ளாணைகோட்டியீதுரைப்பான் ... ... ... ... ... (௨௭)

ஈங்குநீர்போந்த தடுதொழிலின்றி யென்பதையுணர்ந்தனன்செந்தீ,
நீங்கிலெல்லவருணன் வளியகன்றிடிலென்னீள்கதிர்மதிமறைந்திடிலெ,
ணுங்கவருநவமனைத்தும்யாருங்கியளிக்குமென்வெருவனீர்லனை, வீங்
குநீர்வேலியுலகெலாம்புரக்கும்வேந்தர்கோன்விடைமொழிந்தனனால.

வெண்ணிலாக்கற்றை விளிம்புவிட்டெறிந்து விளங்குபூண்டியல்வ
ருதடந்தோள், எண்ணரங்கவென்ற வமரர்தம்முருவ மனைத்துமாயரு
ந்தவப்பயத்தால், கண்ணகன்ஞால முழுவதுந்தானே களைகணாயளித்
தனனென்னி, லெண்ணருந்தவத்தி னின்றுமோளார்பெருமை யாவமோயி
சைப்பதொன்றறைந்தான் ... ... ... ... ... ... ... (௨௯)

௩௰-வது திவோதானனொட்டிற்படுத்தவத்தியாய முற்றிற்று.

ஆக விருத்தம்-௯௨௭.





௪௪-வது

# காசியின் சிறப்புரைத்த

## அத்தியாயம்.

கொண்டல்தவழுமுகம்புலரா மதிதோய்குடுமிமந்தரத்தி, லண்டர் பெருமானடைந்ததற்பி னுற்றவாறுமவ்வரையிற், றண்டாவளனுமு ரைத்தியெனத் தமிழ்சேர்முனிவன்சாற்றிடலும், புண்டோய்குருதி நெட்டிலைவேற் புத்தேள்முறுவலரும்பூத்துரைப்பான் ... ... .. (௧)

குன்றிச்செங்கட்கருங்கேழல் கோட்டினகழ்ந்தசிறுகுழியை, மன் றற்பொலம்பூஞ்சினைவேங் கைத்தாதுதூர்க்கும்வாலுளைய, கன்றுசின வெங்கொலைமடங்கல்களிற்றின் மருப்பின் குருத்துடைத்து, மென்று கமஞ்சூற்பிணவினூட்டும் பெருவான்முழையின்விழித்துயிலும் ... (௨)

அறைவாய்குழித்தகவிழ்தலைய வருவிதூங்குதடஞ்சாரற், சுறவாமு லைப்பால்கன்றருந்திக் கயவாய்வேதிகண்படுக்கும், பிறைவார்கோட்டி னிரலழித்து பெய்புநறவப்பேர்யாற்றின், றுறைவாய்ப்படிந்துபிடி யினொடுங் களிநல்யானைதுளைந்தாடும் .. ... ... ... ... (௩)

சேந்ததழல்கட்டெழிலுளைய வரிமான்கொன்றசினக்களிற்றின், மே ந்துபிறைக்கோட்டுகுமுத்த மலங்குகுலையவெரிபுரைசெங், காந்தள் மலர்மேற்கிடந்திமைத்தல காமர்குலமால்வரைமடந்தை, வாய்ந்தசெ ழுமென்மலர்க்கரத்தால் கழங்காட்டயரும்வனப்பாமால் ..... (௪)

அங்கண்வானத்திலிதுறையு மமரர்குழுவுமரம்பையரு, மங்குறவ ழ்பொற்குவட்டிழிந்து மன்றற்சாரற்பளிக்கறை றங்கிவிளையாட் டயர்தோறும் பரிந்துநீத்ததண்மலர்ப்பூங், கொங்குகமழுமந்தார மாலைநறவங்கொழித்திடுமால்... ... ..... ... ... ... (௫)

குறுங்காற்குரம்பைக்கொடிச்சியர்பொன்னொழுகு குவட்டுமுகடே றி,நறுந்தேன்பிலிற்றுங்கற்பகத்தி னறவுகமழுமலர்கொய்வர், புறந்தா ழ்கூந்தலரமகளிர் பொன்னந்தருவினறியமலர், துறந்தாங்கிழிந்துபசு ந்தேறல் தூற்றுஞ்செழுந்தண் மலர்கொள்வார் ... ... ...(௬)

வேட்டம்படருமுடங்குளைமான் புனிற்றுக்குருளைவிழித்துயில, மோ ட்டுமுதுநீர்ப்பசிறலைய வருவிதூங்குமுகிறவழ்பொற், கோட்டிற்செ

டுக்கவிழ்ந்துமொளிர் குளிர்மாமதியுமிலிறுணர்வான், காட்டுமென்னக்
குழமகளிராதத் தங்கணவர்க்கைதொழுவார் .. ... ... ... (௭)

சோலைக்கழைக்கண்டிறந்துகுத்த சுடர்நித்திலமுநெடுஞ்சுடிகை,
யாலக்கொடுந்தீயொழுகுதலை யெயிற்றரவின்றருமணியுங், கோ
லச்செங்கட்கரும்போதத்தின் கோட்டுமுத்தும்வரன்றிறுநா, மாலைப்
பெருக்காயிரமுகத்த வருவிகொழிக்குமருங்கெல்லாம்... ... (௮)

சினைப்பூவேங்கைதொடுத்தவிறால் சிதையப்புலிற்றுப்பிறைக்கோ
டூந்தின், பனிக்கோடுழக்கவிழ்ந்தருவிப் பசுந்தேல் குதிப்பவெருக்
கொண்டு, கனற்கண்சுழற்றும்பகட்டாளிப் பிணவுகுருளைவாய்கவ்விக்
கனைக்கட்குவளைக்கண்பரப்புந் துறுகன்முழையின்றெளித்திடுமால்,()

கலைவெண்டிங்களிருநிதியங்கணைக்காற் கமலத்திருமடந்தை, மலர்
மென்சினைப்பூங்கற்பகமான் வடக்குங்கடவுண்மணியயிர்த, மிலவச்
செவ்வாயரமகளிர் யாவுமெறிநீர்திரைசுருட்டும், புலவுக்கடலைமதித்த
ளித்த தென்றவிதன்சீர்புகலவற்றோ ... ...., ... ..... (௰)

வேறு.

திருந்துடைக்கொடிக் கவின்முகத்தஞ்சேர்த்திமென், கருந்தினைப்
பசுங்கிளி கடியுமங்கையர், முருந்துறழ்நகைமுழு நிலவெண்றும்பல
மெல், லரும்பினஞ்சுனைதொறு மலர்ந்துகாட்டுமால் ... ...(௧௧)

மடிசெவிநெட்டுடற்றறுகண்வாரணம், படர்சினைக்கற்பகத்தொடித்
தழைந்தழை, துடியடிக்கயமுனியோடுஞ்சூழிளம், பிடியினமருந்து
றப்பெட்பினல்குமால் .. ... ... ... ... .... ..... (௧௨)

மைத்திருநேக்குவான் முழையின்வாளராப், பைத்தலைநெட்தொளிர்
மணியைப்பையத்தன், கைத்தலத்தெடுத்தவுங் கனலென்றஞ்சியே,
துய்த்தலைச்செம்முகமந்திசாருமால் ... ..... ... ...(௧௩)

களிக்கயல்மருட்டிய கருங்கண்மங்கையர், பளிக்கறைமுன்றிலி னு
ணைக்கும்பைந்தினைக், கிளிக்கவராதுவை கிளைக்குமோதையாற், றளிர்த்
திடுமளிசினைத் தருக்கள்யாவுமே..... ..... ..., ... ... (௧௪)

அகின்முருடுருட்டி வீழருவிச்சாரலின், முகிலினந்தவழ்ந்தனு மூரி
வேழமென்; றிகலொடுந்துடர்ந்துசென் றெழுந்துகோட்டுமவ், பு
கர்முகக்களிற்றினம் போரினேகுமால்.... ... ... ... ...(௧௫)

குளகமாச்சுற்றிய குறமடந்தைய, ரிளமுலைச்சாந்திடை யிழுகிமே
றிய, தளர்நடைக்குழவியந் தென்றல்தாழ்சினைத், துளிமதுக்கற்பகக்
காவிறலுஞ்சுடால் ... ... ... ... ... ... ... ... (௰௬)

பூஞ்சுழையிடறுசாய்ந் தாற்றாப்பொற்புடை, யோங்குயர்சாரலி னு
றையுங்கின்னரர், நீங்கருங்காதலி னிணரம்புளர், தூங்கிசைவீணையஞ்
சுருதிபோன்றமே ... ... ..... ..... ... ..... ..... (௰௭)

ஒருபுடைவெண்முகி லுறையவான்றளிக், கருமுகிலொருபுடை கி
டக்குங்காட்சியால், மரகதக்கொடியினை வாமம்வைத்தொளிர், புரிச
டைவானவன் போலும்பொற்பிற்றே... ... ... ... ...(௰௮)

நீனிறமுகிறவழ் சாரனெற்றியின், மானிளம்புனிற்று மென்மறிகள்
வைகிய, பானிறக்கதிர்விரி பளிக்குப்பாறைகள், தூநிலாமதியலதோ
ன்றல்போலுமால ... ... ... ... ... ... ... ...(௰௯)

முகிறவழ்சாரலின் முத்தந்தெள்ளிநீ, டகில்சுமந்ததிரி வசையருவி
பாய்வன, விகலுடையிராவணற் கிடைந்ததென்னெனத், திகழொளி
க்கயிலையைச் சிரித்தபோலுமால்... ... ..... ... ... (௨௰)

தாழ்வரைக்கிடந்தொளிர் சுயங்குபன்மணி, சூழ்சுடர்விண்ணின்மே
ற்றோன்றுபொற்பினால், வீழ்கதிரோவியம்விசும்பிற்பூத்ததென், றியா
ழ்மொழியரம்பையர் வியந்திசைப்பரால் ... ... ... ...(௨௧)

இரவிகாந்தத்தழ லிடையினண்பகல், மருவியுமொளிர்மதி காந்த
வான்றிரைக், குவாபுனல்கக்குவிற் குளித்துநிற்றலாற், பொருவரும
ருந்தவம் புரிதல்போன்றதே... ..... ... ... ... ...(௨௨)

பாய்திரையருவிகள் படக்குஞ்சாரலிற், சேயொளிவிரிகதிர்ச்செ
ல்வன்சேறலால, மீயுயர்குடக்கணை மலர்கள்மேற்புறச், காய்கதிர்க்கர
ங்களாலலர்ந்துகாட்டுமால்... ... ... ... ... ... ...(௨௩)

குடவரைநெற்றியிற் குருதிவெய்யவன், படிதலுமுதயமால்வரை
யிற்பாலொளிச், சுடர்மதிவாயிடைத் தோன்றுபொற்பினாற், புடைம
ணிவிசித்தமால் களிறுபோலுமால் ... ... ... ... ...(௨௪)

இனமலர்க்கோட்டிடைத் தொடுத்ததேனிறால், வினைபுரிவயிரவா
ட்புலிதன்மேற்செலக், கனைதிரையருவிசூழ் விலங்கல்காவலன், புனை
திருமுடைமிருத்தல்போன்றவே ... ... ... ... ... (௨௫)

காமனைப்பரிந்தவெந் துயரங்காழ்கொள, மாசறுமதிநுதல் வருந் தினையெனு, மீசனுக்குணர்த்தலுங் காசிகாசியென், றாசலாடினன் மலைமகளுமுள்ளமே ... ... ... ... ... ... ... ... (௩௬)

கவிழ்குலைநெட்டிலைக் கதலிக்காட்டிடைத், தவழ்குடவயிற்றகுற்ச ங்கமீன்றமுத், தவிரொளிபரப்பிடு மந்தண்காசியி, லுவகையினுறை வதற் குளற்றெழுந்திறான் ................................ (௩௭)

தாரணிதொழுந்திவோ தாதன்றண்கடற், பார்முழுதளிக்கெனப் பணித்தனன்றவன், சீர்கெழுமமரர்பாற் சேரொணுதென, வோர்வரக் கேட்டனனுவந்துநல்கினம் ........................ ... ...... (௩௮)

அன்றுதொட்டின்றளவவனியாவையு, மன்றநல்லறநெறி வழாம லோம்பினான், பொன்றுறுதவறவன் புரியினல்லதை, யொன்றுமே பரிய லொழிக்குட்வண்ணமே... ..... ... ... ..... (௩௯)

என்றுயர்மால்வரை யிவிதினீன்றருள், பொன்றவழிளமுலைக் கோ திமுங்குழ, லொன்றியயோகினிச் சகலரத்துடன், கொன்றையம்புரி சடைக் குழகன்கூறுவான் ... ... ... ... ... ..... (௪௰)

அறந்திறம்பாதுல களிக்குமன்னவன், சிறந்தநன்மனுநெறி திறம் பிக்காசியைத், துறந்திடவியற்றுமி னென்வயத்தொக்கவர்க், கறங்கு நீர்க்கங்கைசூழ் காசிமேயினோர்... ... ........................... (௪௧)

௨௪-வது காசியின்சிறப்புரைத்தவத்தியாய-முற்றிற்று,

ஆ. விருத்தம்-௲௨௯௮.



௨௫-வது

## யோகினிகள்காசியையடைந்த

### அத்தியாயம்.



கன்னிமெயிற்சூழ்ம்வளர் காசியைவியப்புற், றன்னலருமாயை புரி யோகினிகள்யாரு, முன்னையுருமாறியுயிர் மோகம்விளைவிக்கும், மன்னுபலநல்லுருவு கொண்டிடவிழைந்தார் ... ... ..... .. (௧)

விண்ணவர்தம்மாருயிரும் வேரொடுபிடுங்குந், கண்வலைபெய்துநீந்தி
னோருர் மேயகடைதோறும், பண்ணொடுகொழுங்கனி பழுத்தனையவி
ன்சொல், வண்ணமகளாகியொரு வாணுதல்நடந்தாள் ... ...(௨)

காலனையுமர்க்குவருகென்றுகடன்ஞாலத், தோலைவிடுமைமக்களுயி
ரோவியநிகர்ப்பாள், கூலமறுகிற்குமரர் கொள்கெனநறுந்தண், மாலை
பகர்மாதரி னொருத்திதனிவந்தாள் ... ..... ... ... ... (௩)

முறத்திடுகநெற்குறி மொழிந்திடுவனின்னே, பெறற்கருமகப்பெ
றுவை பெட்பினுடன்முற்றுஞ், சிறப்புடைமயிற்றொகை விரித்த
தெனவோதிக், குறக்கொடியெனத்தனி யொருத்திகுறுகுற்றாள் (௪)

வேதியர்தம் முன்னணுகி மெல்லெனநடந்தே, யேதமறுகற்பு
டைய ரேனுமவர்நம்மேற், காதலுறமென்மொழி கனாத்திடுவனென்
போற், றாதியரிலென்றொரு சுடர்த்தொடிபுகுந்தாள் .... .... (௫)

அந்தமறுவிஞ்சையற வோரொடுபயின்றேன், வந்தியர்மகப்பெ
றுமருந்துளதுமக்குத், தந்திடுவலென்றுரைகள் சாற்றிமனைதோறும்,
பைந்தொடியொருத்திவிழை வோடுபடர்குற்றாள் ..... ... (௬)

தையலொருபாகனுறை யுங்கயிலைதன்னை, அய்யமறவெள்ளிவரை
யாக்கினன் முன்னென்று, வையகமனைத்தையுமருட்டிரதவாதஞ், செ
ய்யுமவளென்னவொரு சேயிழைபுகுந்தாள் ......................... (௭)

அங்கிபுனல்மாருத மடக்குவன்விசும்பிற், றங்கிடுவன்மீள்வனெரி
மைப்பொழுதுதன்னிற், கங்குல்பகல்செய்துகதிர் மாறியருவிப்பன்,
பைங்கொடியன்னீரென வொர்பாசிழைநடந்தாள் ............... (௮)

விண்ணவர்மனத்தினை விழைந்திடுதிரோனு, மண்ணுலகின்வந்தவர்
மணந்திடவருத்த, மெண்ணரியவிஞ்சைகளியற்றிடுவனென்னக், கன்
மலர்குளிர்ப்பவொரு காரிகைபுகுந்தாள் ......... ....... ........... (௯)

பாறுதுடர்வேலரசர்வந்துபடைவிட்டான், மாறழியும்வண்ணநவி
ல்விஞ்சைபலவல்லேன், றேறுனரல்லாவினை தெளிந்திலர்தமக்குக்,
கூறுகிலனென்றொரு குலக்கொடிபுகுந்தாள் ..................... (௰)

கட்புலனுறாதுடல் கரப்பனெறிமைப்பின், விட்புலமடந்தையனை
மண்ணிடைவிடுப்ப, னுட்பவனுவாலன்மலையாவனெனநொய்திற், பெ
ட்புறையயிற்றியொரு பெண்கொடிநடந்தாள் .................... (௰௧)

எஞ்சலினிலத்திடை புதைத்தபொருள்யாவுங், கஞ்சமலரங்கையி
னமைத்தகனிபோல, வஞ்சனம்வரைந்துதெரிவிப்ப வஃதேந்தா,
விஞ்சையெனவோதியொரு மெல்லியலணைந்தாள்.......... (௰௨)

வள்ளைபொருகாதிடை மலர்ந்தகுவளைக்க, ணெள்ளியுமதாருயிரை
யுண்ணுமைகள்வீசொன், றொள்ளிழையுநாடரும மொல்லெனமயாவி
ப்பதீ, தெள்ளாயிரமமொழ்கமொரு சேயிழைநடந்தாள்........ (௰௩)

கண்டவர்வியப்பவணி நீற்றொளிகனிந்த, புண்டரநுதற்கிடைபுனை
ந்திளியகற்றேட், ருண்டுகிலசைத்துமிக நோற்றுடலம்வாட்டு, மொ
ண்டொடிகொளாமனை யொருத்திபுகுகின்றாள் ................ (௰௪)

இறந்தனநிகழ்ந்தனவெதிர்ந்திடுவதெல்லா, மறிந்திடுவன்யானென
வொருத்தியகன்மாடஞ், சிறந்திடுமடந்தையர் குழற்றெரிடநீந்தெஞ்,
குறந்துளிபிலிற்றுமயர் கோமறுகடைந்தாள்................. (௰௫)

மாதர்களில்மைந்தர்களில் வல்லவர்களுண்டேற், சூதுபொரவம்மி
னென மெல்லுரைகள்சொல்லிச், சோலையொடுவண்டின மலைப்புகு
மூழுழ, வீதியிடைமின்னனையொர் மெல்லியல்புகுந்தாள் ...(௰௬)

மல்லன்மறுகிற் குலமறைக்கிழவர்பாலிற், கல்லுமுருகும்படிக ளிந்
தமுதுருக்கு, நல்லிசையமென்புரி நரம்புளரவல்ல, மெல்லியலெனு
மொருவிளங்கிழைபுகுந்தாள் ... ... ... ... ... ...(௰௭)

நீடுயர்மதிற்குடுமி நீண்மறுகுதோறு, மாடகமுறுக்கிமணி வீணை
கையிலேந்தி, யோடரியமைக்குவளை போலுமலருண்கட், பாடன்ம
கனென்னவொருபைந்தொடிபுகுந்தாள்... ... ... ..... (௰௮)

வேறு.

உருவமின்னனைகொண்டுடன், பருவமொன்றுபடுக்கவு; மருவுகாசி
யில்வைகினோர், தருமநீதிதனைந்திலார்... ... ... ... .. (௰௯)

அங்கண்யோகினியன்னலார், மங்கைபாகனை வாழ்த்துறு, கங்கைசூ
ழ்தரு காசியிற், றங்கியிக்க தவஞ்செய்தார் ... ... ... ...(௨௰)

வடுக்கண்மங்கையொர் பங்கினன், விடுத்தவேவல்வியப்பினால், மு
டித்திலேமவன்முன்னரியா, மடுப்பதென்னெனவஞ்சினர் ... (௨௧)

இனையரிங்ஙனமெய்தவு, மனையநாமமருந்தவன், வினவலோடும் விளக்கவெவருஞ், சினவுவேலிறைசெப்பினான் ...... ...... ... (௨௨)

இன்னநாமமியம்பினோ, ரன்னபூசனையாற்றினோர், நன்மகாரொடு நாடொறு, மன்னிவாழ்வுறவைகுவார் ... ... ... ... ...(௨௩)

அரசரிக்கவமாற்றிடிற், செருவில்வெற்றிதிறம்பிலா, ருருவமைந்த ரோடொன்றியே, பொருவிலவாழ்வுபொருந்துவார்... ... (௨௪)

௪௯-வது-யோகினிகள்காசியடைந்தவத்தியாயம்முற்றிற்று.

ஆக விருத்தம்-௩௲௨௨.

§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§

௫௰-வது.

# லோலாதித்தன்கதையுரைத்த

அத்தியாயம்.

§§§§§

மன்றனீம்புனல் வளங்கெழுகாசியின் வேந்தன், றன்னொழுக்கினைத் தவிர்த்தெனவிடுத்தயோகினிக, ளின்னும்வந்தில வாவெகொலென்றிறை யுளத்தெண்ணி, பின்னுசெங்கதிர்க் கடவுளைநோக்கினன்விளம்பும் (௧)

காசிமாநகர்க் கெய்தியக்கடிநகர்புரக்கு, மாசில்மன்னவ னறனெறி வழுக்குறப்புரிகென், றீசனேவலுமடியவர்கைதொழுதேத்தித், தேசலாங்கதிர்ப்பருதியங்கடவுளுஞ்சென்றான் ... ... ... .. (௨)

அறனிழுக்குறுமன்னவன் காசியிலடைந்து, பெறலரும்பொருள்யாதெனப் பெட்பொடிபோர்ந்து, வறியரிற்றுயநழந்துயர் மணிக்கடை தோறும், குறையிரக்குமாங் கதுபெறினுறுகுறையும் ...(௩)

கேட்டுவண்பொருள் யாவையும்யாவருமுவந்து, கூட்டுறும்படியளிக்குவமென்படக்குறித்து, வேடங்கொள்கென விற்குமவ்விழைபொருளெவருங், கேட்டுவாங்குனரிலைமையாற்சென்னி நிமிர்ப்படுக்கும் (௪)

தாம்புடைப்பிறையெயிற்றவெம்பணமுடிச்சுடிகைப், பாம்படுத்தகன்விஞ்சை வலமெல்லனைப்பகருந், தேம்புவாரினின்றலாவருஞ் செஞ்சடைதாங்கி, மேம்படுந்தவப்பள்ளி சேர்முனிவரிலமைவுழ (௫)

அருள்சுரந்துயர்தருமநூன்முறைபுகன்றதனால், வருபயன்றனைத்தெருளுறக் காட்டுநான்மறையின், பொருடெரிந்தமெய்ஞ்ஞானியாற்புலனரும்பொருவில், விரதவாதியென்றியாரையுமருட்டுவானமைந்தும் (௬)

மறைவழுத்து நாத்தழும்புற முனிவரின்மருவுஞ், பிறையெயிற்றி
ன நிலவுகொப்பிளித்திடும்பேழ்வாய்ப், பொறியணைற்பெரும்பாந்த
ன்மேற்கிடந்தபார்புரக்கு, மறைகழற்றொழுங்குருதி வேலரசினுறை
யும்... ... ... ... ... ... ... ... ... ... ...(எ)

அரும்பெறற்குலவணிகரினுவந்திவிதமரும், விரும்புவேட்கையி
ன் மண்மகள்புதல்வரின்மேவுந், திருந்துநான்மறைப் பயின்மறைச்
சிறுவரிற்சேரும், பொருந்துமில்லறந் திறம்பிலாமாந்தர்போன்றிரு
க்கும் ... ... ... ... ... ... ... ... ... ... (அ)

பைங்கதிக்கொடிப்படர் நெடுஞ்சாலிஞ்சூழ்காவிற், றங்கிநற்றவட்பு
ரிகுனர் போன்மெனச்சாரும், பொங்கிருட்பிழம்பெறிசுடர் விரிபக
ற்போதுங், கங்குலுந்திரிந்தாற்று நற்றவருருக்காட்டும் ... .....(௯)

வேண்டுநல் லுருவின்னனவெய்யவனெடுத்துச், சேண்டொடுங்
கொடிப்புரிசைசூழ் காசியிற்றிரிந்து, மாண்டுமூன்றளவறநெறிதிறம்
புதல்சிறிதுங், காண்டல்செல்கிலனுதலிற் கருதினனிருந்தான் .... (௰)

மூவிலைச்சுடர்மூரட்படை யேந்தியமுதல்வ, னேவல்மற்றதுமுடித்
திலன் காசிவிட்டினியான், போவதெங்ஙனம் புரிசடையானவன்முனி
யின், மேவதல்லதை யாவதோகாக்குனா விளம்பின்... ... ...(௰௧)

ஒரிவனேவலிற் றிரிகுனர்க்கருப்புகழுறுகாற், றிருகுசீற்றவெம்பு
லியதளாடையஞ்செல்வ, னருள்பெறுக்கொடும்பாவயிக்காசியினமரி
ன், வெருவியேகுமென்றிருந்த னங்கனைகதிர்வந்தன்... ...(௰௨)

சேட்டிளங்கதிருன் படச்செங்கதிர்பரப்பு, மோட்டுநன்மணிமூன்
றுறல்விடுத்தறச்சிதைந்த, வோட்டையங்கையிற் கோடலேபோது
மொண்முத்தி, வேட்டுளோருயர்காசிவிட்டயலிடம்விரும்பல்...(௰௩)

நல்லுலோலனுத்தானியற்சாம்பனற்றுருப, னெல்லொளிக்கதிர்க்க
டோற்கமேருடருணனேர்விருத்தன்,புல்லுகேசவன் விமலன்வானதிறம
னென்னச், சொல்லுநாமமோர்பன்னிரண்டாயினன்சுடரோன் (௰௪)

மதிவடிம்பிடறுங்கொடிமாடநீண்மறுகிற், கதிர்மணிக்குலஞ்சேட்
டிளம்பருதியிற்காட்டு, மதிர்தடம்புனற்காசியினடைவனென்றுசை, யி
தயமெய்த்தலால்விளங்குலோலாதவனென்பார் ... ... ...(௰௫)

௪௯-வது லோலாதித்தன் கதைமுற்றிற்று.

ஆ விருத்தம்-௩௯௯௭.

மூகுவயற்காசிநன்னகர், தொழக்கருசெங்கதிரோனை வழிபடிவிந்நோ
யனைத்துந்தொலைபுமென்று, தழைந்தகருணையினுரைப்ப வாங்கவனு
மூத்திநகர் சென்றுசார்ந்தான் ... ... ... ... ... ... ... (௰௧)

மருவலாருயிர்மாந்திப்பக்கிரச்தஞ்சொப்பளிக்கும் வைவேற்காளை,
யிருள்விழுங்கி யவயிழு யிழுமிரவிபதமலர்க்கமலமிறைஞ்சலாடும்,
பெருகியநோயகன்றதன் வழிபடலாலன்றுமுதல பிறங்கும்வெய்
யோற், கருள்புரியுங்கனகதிர்ச் சாம்பாதித்தனெனும் பெயர்வந்த
டைந்ததன்றே ... ... ... ... ... ... ... ... (௰௨)

பொருவறுமிக்கதையனைத்தும் விழைவினொடுகேட்டோரும் பு
கன்றுளோரும், திருமருவுபெருஞ்செல்வத் தளகேசனெனவுலகிற் சிற
ந்துவாழ்வர், விரிகருகூரிருள்பருகுபயிற்சிபா லன்பருளமேவுகின்ற,
விருள்பருகுமருவாதித்தனியற்சரிதைதனையியம்பலசெய்வாம் (௰௩)

௪௮-வது - சாப்பாதித்தன்கதையுரைத்த அத்தியாயம்-முற்றிற்று.

ஆக விருத்தம் - ௩௬௬௰.



௪௯-வது.

# துருபாதித்தன்கதையுரைத்த

## அத்தியாயம்.



கருச்குழவிப்பிறைபலங்கலெம்மானருளாற்குந்திவயிற், றுருச்செ
ல்லந்தழைத்தோங்கலைவர்பிறந்தாராங்கவர்க்குத், தாரோர்மனையாய்ப்
பாஞ்சாலன் புதல்வியாகித்தழங்மகத்திற்றின், மீருர்தடங்கட்டுரோப
தையுயின்னுக்கொடிபோல்வந்துதித்தாள் ... ... ... ...(௧)

மலாசனத்திலரசிருக்குங்கடவுளோடுமுலகின்ற, விமையப்பாவை
க்கரும்பாகனுலகநவியுயிடலாசர், தமகாருயிர்வெங்களகடியத்தரும
ன்முதலோர்க்குறந்துணையா, யமையார்தடந்தோட்டேவகிதன்வயிற்
றின்வினைவுரித்தான் ... ... ... ... ... ... ... (௨)

கடிபொன்பழுக்குஞ்சினைப் பலவின்கனிவாய்குதட்டித்துய்த்தலை
யக், கடுவன்முதுகுவியடந்திக் கருத்துங்கழனிசூழ்கிடந்த, வொடிவில்
வளங்கொபாஞ்சாலத் திசுதலவிறைவொன்றுமலைக், கொடுவெஞ்சி
லைத்தழும்பச்சிலைப்பவிளையிற்கொண்டனால் ... ... (௩)

நிலவுபொழிதண்மதிக்கவிகைநிழற்றியரசர்திறையளப்ப, வுலகமூழுதம்புகழ்த்தருமமெனுருகோலோச்சிவருநாளி, லலகில்புணர்ப்பாற் சுயோதனன்சூதாடியவனிகவர்ந்திடலு, மிலகுமவுலிதுறந்துசடைதாங்கிக் கானத்தெய்தினரால் ... ... ... ... ... ... ...(௪)

உடுப்புமுகத்தகூன்கொழுவினுழுதசாலி னிடைத்தவழ்ந்து, குடக்கூன்சங்கமுத்துயிர்க்கும் வளங்கூர்காசிக் கோநகரில், வடிக்கட்குவளைகுழைதடவுமயிலஞ்சாயற்கரும்பெறிந்த, தொடித்தோட்கனிவாய்ப் பாஞ்சாலியைவரோடுந் துன்னினளால் ...... ...... ... (௫)

வடிவேல்நெடுங்கட் பாஞ்சாலிவயக்குகதிரோன் றனைநோக்கி, யொடியாத்தவமாண்டியற்றுதலுமுவந்தாங்கவள் கைத்திடமளவுங், கடஞ்சூழ்கிடந்த வுலகனைத்துங்களைந்தாறும் பசியால்வருந்திடினு, மடிசிலுவாய்பொற்குழிசிமகிழ்விறேடுயளித்தனனால் ... ... ...... (௬)

அதனாற்றுருபவாதித்தனெனும்பேர் கதிரோற்காகியதிக், கதையாற்றினமு நவில்வாரவர்களற்றும்பசியினுடல்வருந்தார், மதிநூற்கடலின்றுறைபடிந்தோய்மயூகாதித்தன்கதையதனைப், புதிதாயமிழ்திற்கோவதுபோற்கேட்டியென்னப்புகன்றிடுவான் ... ... ... ......(௭)

௪௯-வது-துருபாதித்தன்கதையுரைத்த அத்தியாயம்-முற்றிற்று.

ஆ-விருத்தம்-௩௩௯௭.

§§§§§§§§§§§§§§§§§§§§§§§§ §§§ §§§§§§§§§§§§§§§§§§§§§

௫௰-வது.

# மயூகாதித்தன்கதையுரைத்த

## அத்தியாயம்.

இருள்சிதைத்தொளி ரேழ்பரியெங்கதிரோன், பரிவாலுயர்பஞ்சநதிக்கரைவா,பருளாலோரிலிங்கமமைத்திதயத், தெருளாலுயர்பூசனைசெய்தனனால் ... ... ... ... ... ... ... ... ...... (௧)

ஆறேறியசெஞ்சடை யந்தணனை, நூறாயிரம்யாண்டோர் நொடிப் பொழுதாய், மாறாதுயர்வான் றவமாற்றுதலும், வீறார்கதிரொக்கும்விரி ந்ததுமே ... ... ... ... ... ... ... ... ... (௨)

அரிதாயதவம்புரியாதவன்மேல், விரிவெங்கதிரண்டம் விழுங்குத லாற், றருநீழலில்வானவர்தானவர்கள், றரியாதுடம்பெற்றுறுவகைத் தனரால்... ... ... ... ... ... ... ... ... ... (௩)

மதிதாழ்தருசெஞ்சடை வானவன்வெங், கதிரோன்முன்னடைந்துறு காதலினு, லெதுநீதருகென்னவிசைப்பினுமற், றதுநல்குவனென்ன் வறைந்திடலும்... ... ... ... ... ... ... ... ... (௪)

விடயங்களில் நெஞ்சம்விடாமையின்யாம், நொடிகின்றதநிந்தில னுன்மையனென், றடைகின்றபரம்பொருளாதபனைத், தடவந்தண ன் மேனிதளிர்ப்புறவே............................................(௫)

செய்யுந்தவம்விட் டொளிசேர்த்தொளிரு, மொய்செங்கதிர்வான வன்முன்னணுகி, மெய்யங்கையினீவவிழித்தருளால், மையுண்டொளி ர்கண்டனைவாழ்த்தினனால...... ...... ...... ...(௬)

விண்ணோருமகிழ்ந்து வியப்பவெனைப், பண்ணார்மொழியோடுப ழிச்சலினென், கண்ணாகவிருத்தியெனக்கழறு, வெண்ணார்புரமட்டவ னையினறல் ... ... ... ... ...(௭)

வேறு.

இலகுபேரொளிகிளைத்தலாலெழிபுனலுடுத்த, உலகின்மேல்மயூகா தபனெனும் பெயருற்ற, தலகில்கேள்வியோய்நற்கடோற்காத பன்க தையை, நிலவுமாறுனக்குவனத்கேனென நிகழ்த்தும் .... ....... (௮)

ரு௰-வது மயூகாதித்தன்கதையுரைத்த அத்தியாயம் - முற்றிற்று.

ஆ. விருத்தம்- ௲௬௭௫.





௫௧-வது.

# கடோற்காதித்தன் கதையும்.

## கருடேசன்கதையுமானது-அத்தியாயம்.



### வேறு.

அருமகம்புரிந் தாற்றல்சால் தக்கனுக்கருளால், பொருவில்பேரெழில் வினதைகத்துரு வெனப்புகலு, மிருவர்நன்குலப் புதல்வியருளரி யைந்தவரை, விரியுநன்மறைப் பொருடெரிகாசி பன்வேட்டான்()

உலைமுகம்பழுத் துடைந்தற வொழுகியபசும்பொற், கலனணிந்தபூங் கொம்பனாரிருவருங் காவி, னிலகுநாண்மலர் கொய்தலுங்கத்துரு வென்பாள், விலகிவில்லுமிழ் பூண்முலைவினதையோ டுரைப்பாள் ()

தேவர்கோனிவர் புரவியிந்நிறமெனத் தெரிப்பி, னேவனின்னுழை செய்குவன்யானலீஇயம்பிற், காவியங்குழையுங் கடந்தெறியும்வாட் டடங்கட், பூவையென்னுழை யேவல்நீசெய்கெனப் புகன்றாள்...(௩)

அண்ணல்வானவர்க் கிறைவனூர்ந்திறற் புரவி, வெண்ணிறத்ததென் றணிநுதல்வினதைதேர்ந்துரைப்பப், பண்ணுலாங்கனி மென்மொழிக்கதிர்முலைப் பாவா, யெண்ணின்மற்றது கரிதெனக்கத்துரு விசைத்தாள் ..... ... ... ... ... ... (௪)

ஈதுகொண்டுமென் றற்றைநாளில்வயினேகி, மாதர்வாணுதற் கத்துருவானவர்க் கிறைவன், காதல்கூர்தருபுரவியைக்கருமைசெய் திவணீர், போதுகென்றுதா னுயிர்த்தவாளரவொடும் புகன்றாள் .......... ...(௫)

மரகதப்பருமணிச் சுடருடுத்தொளிர் வளைத்தோட், டெரிவைசாற் றிய வெம்மொழிச்செவிப்பட லோடும், வெருவுகின்றதெம் முள்ளநீ விளம்பிய தெம்மாற்புரிவதன்றெனப்புகன்றனகறையனற் புயங்கம்.

ஆயநாலையிற் கத்துருவழலெழ நோக்கிப், பாயசெம்மணிச் சூட்டு வெம்படமிறலைத் துத்திக், காய்சினத்தகா வரவெலாங்கனலுக் கிரையாய்ப், போய்மடிந்திடு கென்னவெந்தீமொழி புகன்றாள்........(௭)

வைதபின்சில வாளெயிற்றரவுபாதலத்தி, னெய்தலுற்றனசில கறவொடும்விளர்ந்தேகிக், கைதவத்தினொ லொழுகுதீயிடத்தினுற் கருமை, செய்தவின்னவர் தலைவனூர்புரவியைச்சினவி .... ......(௮)

மன்றல்வார்குழ லிருவரும்வைகறை கழிந்த,பின்றைவாவிடைச்சே
றணுங்கத்தருப் பிறங்கித், துன்றுவெங்கதிர்க் குளம்வெரீத்துனிவொ
ழுங் கடோற்க, மென்றதாற்கடோற் காதபனென்னவீற்றிருந்தான்.'()

ஆண்டுநின்றபோ மளவையினமரர்கோன்செருவிற், றாண்டுவெம்
பரி யெதிர்தலுநீனிறந் தோன்றக், காண்டலோடுநீ வென்றனைக்கத்து
ருதினக்கு, வேண்டுமேவல்செய் குவலெனவினதைசெப் பினளால்.()

நெய்கனிந்திருள் விழுங்குசெங்குருதிவே னெடுங்கட், டையலின்று
யிர்ச்சிலதியாயுறையுநா டன்னி, லையறுண்ணிடைத் .தேமொழிவின
தையா லடைந்து, வெட்யவண்ணலம் புள்ளரசினையன விளம்பும்(௰௧)

வயிறலைத்தெறி விரிசிறைச்சுட்டுவா ரணங்கூய்த், துயிலெழுப்பிய
காலையிற்பெயர்திவெஞ் சுடர்கால், வெயிலவன்றிலாக் குடகடற்குளித்
திடிங்கீள்தி,யயர்திபேற்பயந்துறா துயவொன்னெனவறைந்தான்.(௰௨)

மாதர்யாழிசை மருட்டுமென்மழலையந் தீஞ்சொற், பேதைகத்து
ருவென்றனளென்னுளா பிழைத்த,தாதலாலவட் கடிமைபூண்டழுங்
கின னென்னுக், காதல்கூர்ந்தினி துயிர்த்தவெங்கலுழனுக் குரைத்
தாள்... ... ... ... ... ... ... ... ... ... (௰௩)

பூவையன்னவ ளினிதருள்புதல்வர்பா லடைந்து, தேவரும்பெறற்
கரும்பொருளாயினுந் தெரிந்து, மேவல்யான்செயா தொழித்திடிற்
றருகுவ லென்ன, வாவியன்னவென் னன்னைபோயுரைத்தியென்றறை
ந்தான்... ... ... ... ... ... ... ... ... ... ...(௰௪)

கலுழனல்லுரை கேட்டலுங்கதுமெனப் போகி,யிலகுவாளெயிற்ற
ரவுகட்கியம்பலு மிமையோ, ருலகிலின்னமிர் தளித்திடில்விடுதுமெ
ன்றுரைப்ப,மலர்பெய்வார்குழல்வினதைதன்மைந்தனுக்குரைத்தாள்,

அகல்விசும்புறை யமிழ்துகொல்கொணர்வதற் கரிய, இசலும்வெ
ம்பசி தணிப்பதற்கருளுதி யென்னத், தகர்மருட்பினிற்றிருந்துவீழ்
தாடிவில் வேடர், துகிர்படுந்திரைத் தொடுகடற்கரையினிற்றொக்கார்.

அனையாருயி ரருந்திவெங்கனற் பசியாற்றித், தனைவிலேகுதியவ
ருழைச்சருதினால் முனிவன், றனைவிழுங்கலே விழுங்கில்நின்மிடற்றி
னுடைத் தழல்போற், கனலுமாற்றலன் றனைபுமிழ்ந்தேகுதி கடிதின்'()

அண்ணலஞ்சிறைப் புள்ளரசேகனு மமுதைத், தண்ணந்தாமரை
த்தாக்கணங்கிளமுலைச் சாந்த , மண்ணுநீள்புயத் தண்ணறன்கையி
னால் வவ்வி, விண்ணவற்கிறை மகிழ்ந்திடவினைவினு லளித்தான் (௫௬)

கரியமேனியன் செய்யதாமரைத்தடங் கண்ணன், விரைவினின்ன
மிர் தெடுத்துவிண்போகிய துணரா, தரவம்யாவையு மவ்வுழிபடை
ந்துதெள் ளமிர்தும், பருகநேடலுங் காண்கலாதாருயிர் பதைத்த. ( )

உருத்துநெஞ்சழன் றுண்ணுயின் சுவையமு திருந்த, தருப்பைய
ன்முறை நக்கலாற்றழல்விழிப் டாம்பின், விரிந்தநாக்கடைப் பிளந்
திரண்டாயின விளைந்த, யருத்திகூர்ந்துடுள் ளரசொடுங்காசியினடை
ந்தான்... ............................................................ (௫௮)

அடைந்துநற்கோடீற் காதயன்றனைவழிப் படலால், மடந்தைநா
மம்வெங் கிரவற்காயது வலத்தாற், படங்கொள்சேடனைப் பரித்து
மேலணிந்தவெங் கலுழன், றுடர்ந்தவன்பிறு லிலிங்கமொன்றமைத்
துடிதொழுதான்... ... ... ... ... ... ... ... ... (௫௯)

கலுழனுற்றியகாமருதவத்தினைவியந்து, நிலவுதூங்கிளம்பிறையணி
நீள்சடைக் கடவு, ளலகில் நல்வர மளித்துநம்மடியரிற் சிறந்தோ, னு
லகுபூத்தசெந் தாமரையுந்தியக் கடவுள் ...... ..................... (௬௰)

ஆங்கவற்குநீ யூர்தியாயடைதியென் றறைந்து, தீங்கில்வரமுலந்
தனுஞ்செல்கைக கலுழன், வீங்கிறென்றடம்புய முளங்குளிர்ப்புற
விழிநீர், தூங்கமெய்ம்மயிர்சிலிர்ப்புறத்தொழு திவைசொல்வான் (௬௧)

ஐயநின்னுடை யடியர்தம்மடியர்பூங் கமலச், செய்யசேவடி செ
ன்னியிற்சூட்டுத லடியற், கெப்திநின் றம்தார் கடனெனவிருகாக் கூ
ப்பி, மையில்பாற்கடற் றுயின்றவன் மருங்குசென் றடைந்தான். ( )

௫௪-வது-கடோற்காசித்தன்கதையுங்கருடேசன்கதையுமுரைத்த

வத்தியாயம்-முற்றிற்று.

ஆக விருத்தம்-௩௬௰௭.



